# தமிழ் 5

பிரிவினை எங்கும் பேதமில்லை



தமிழ்நாட்டுப்
பாடநூல் கழகம்

# தமிழோசை

## தமிழ்

### ஐந்தாம் வகுப்பு

தீண்டாமை ஒரு பாவச்செயல்

தீண்டாமை ஒரு பெருங்குற்றம்

தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்



தமிழ்நாட்டுப்
பாடநூல் கழகம்

கல்லூரிச் சாலை, சென்னை - 600 006

முதற் பதிப்பு - 1999
மறு பதிப்பு - 2006

## நூலாசிரியர்கள்

1. அ. கருப்பையா
ஊ.ஒ. நடுநிலைப்பள்ளி
கொத்தக்கோட்டை,
புதுக்கோட்டை மாவட்டம்.

2. நா. சீதாராமன்
ஊ.ஒ. நடுநிலைப்பள்ளி
சிந்தாமணி,
விழுப்புரம் மாவட்டம்.

3. க. தங்கவேலு
ஊ.ஒ. நடுநிலைப்பள்ளி, பாக்கம்,
காஞ்சிபுரம் மாவட்டம்.

4. பி. மரிய செபாஸ்டின்
அ.தொ. பள்ளி
கடியப்பட்டினம்,
கன்னியாகுமரி மாவட்டம்.

5. நா. சந்திரா
ஊ.ஒ. தொடக்கப்பள்ளி
பென்னாத்தூர்,
வேலூர் மாவட்டம்.

6. க. உமாதேவி
ஊ.ஒ. தொடக்கப்பள்ளி
குரும்பப்பாளையம்,
கோவை மாவட்டம்.

7. எஸ்.என்.கேசவன்
ஊ.ஒ. தொடக்கப்பள்ளி
பூனாத்தன அள்ளி,
தருமபுரி மாவட்டம்.

8. ஓவியர்
கவா

## மாநில வளக்குழு உறுப்பினர்கள்

அ. திருநாவுக்கரசு
விரிவுரையாளர்
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்
திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005.

த. தனுக்கோடி
விரிவுரையாளர்
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்
தே.கல்லுப்பட்டி
மதுரை மாவட்டம் - 625 702

சி.வீ.சேஷாத்ரி, ஆலோசகர்
மாவட்டத் தொடக்கக் கல்வித்திட்ட இயக்ககம்,
சென்னை - 600 006.

**விலை : ரூ 18-00**

பாடங்கள் தயாரிப்பு : **தமிழ்நாடு அரசுக்காக மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம்** (தமிழ்நாடு)

இந்நூல் 70 ஜி.எஸ்.எம். தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

ஆப்செட் முறையில் அச்சிட்டோர் :
ஆர்.ஜே. பிராசஸ், சென்னை – 600 002

## தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே !

– மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## நாட்டுப் பண் – பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கின்றாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒரிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன. இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே! உனக்கு

வெற்றி! வெற்றி! வெற்றி!

## தேசியப் பாடல்

வந்தே மாதரம்!
ஸுஜலாம், ஸுபலாம் மலயஜ ஸீதலாம்
ஸஸ்ய ஸ்யாமலாம் மாதரம்
ஸுப்ர ஜ்யோத்ஸ்நா புலகித யாமிநீம்
புல்ல குஸுமித த்ரும் தள ஸோபிநீம்
ஸுஹாஸிநீம், ஸுமதுர பாஷிநீம்
ஸுகதாம், வரதாம், மாதரம்!

வந்தே மாதரம்!
வந்தே மாதரம்!

-பங்கிம் சந்திர சாட்டர்ஜி

## உறுதிமொழி

'இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் எனது உடன் பிறந்தவர்கள்.

என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்பிற்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன். எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன். என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்'.

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன் என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன் என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்'.

## தமிழ்த்தாய் வாழ்த்து

**நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்**
**சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்**
**தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்**
**தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே**
**அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற**
**எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!**
**தமிழணங்கே!**
**உன் சீரிளமைத் திறம் வியந்து**
**செயல் மறந்து வாழ்த்துதுமே!**
**வாழ்த்துதுமே!**
**வாழ்த்துதுமே!**

-மனோன்மணீயம் பெ. சுந்தரம்பிள்ளை

## பாரத மாதாவின்முன் மாணவனாகிய / மாணவியாகிய நான் மேற்கொள்ளும் சபதம்

பெயர் :

வகுப்பு : பள்ளி :

நான் ஒரு இந்தியன். சாதி, மத வேறுபாடுகளைக் களைந்து பள்ளிக் கல்வி மூலமாக நான் பெறும் நன்மைகளைத் தாய்த்திருநாட்டின் உயர்வுக்காகப் பயன்படுத்துவேன்.

வந்தே மாதரம்! கையொப்பம்

## அன்புக் குழந்தைகளே!



உங்கள் கைகளில் தவழும் **தமிழோசை** அறிவை வளர்க்கும்; ஆற்றலைப் பெருக்கும்; அறிவியல் மனப் பான்மையை உருவாக்கும்;

பாடவும் பேசவும் எழுதவும் உரையாடவும் நடிக்கவும் விவாதிக்கவும் மேடை அமைக்கும்;

அறிவுரை கூறி அன்புவழி காட்டும்; கொடுத்து மகிழும் உணர்வை ஊட்டும்;

சிரிக்கவும் சிந்திக்கவும் காரண காரியங்களை ஊகித்து மகிழவும் கதைகள் பல கூறும்;

செயல்களும் பயிற்சிகளும் தன்னம்பிக்கையை ஊட்டி மொழித்திறனில் முழுமைபெறச் செய்யும்;

உயர்கல்விப் பயணத்திற்கு ஊக்கம் ஊட்டும்; ஆசிரியரோடு துணை நின்று வழிகாட்டும்.

**இந்நாட்டின் எதிர்காலச் செல்வங்களே!**

**உங்கள் கல்விப் பயணத்தை இனிதே தொடர**

**எம் இனிய வாழ்த்துகள்.**

# பொருளடக்கம்



# 1 பிரிவிலை எங்கும் பேதமில்லை





எங்கும் பாரடா இப்புவி மக்களை
பாரடா உனது மானிடப் பரப்பை!
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்
'என்குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சிகொள்!
அறிவை விரிவு செய்; அகண்ட மாக்கு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை
அணைந்து கொள்! உன்னைச் சங்கமம் ஆக்கு!
மானிடச் சமுத்திரம் நானென்று கூவு!
பிரிவிலை எங்கும் பேதம் இல்லை...

- பாரதிதாசன்



**இயற்பெயர் :** *கனக சுப்புரத்தினம்*
**சிறப்புப் பெயர் :** பாரதிதாசன்
**பெற்றோர் :** *கனக சபை - இலக்குமி*
**பிறப்பிடம் :** புதுவை
**தோற்றம் :** *29-04-1891* **மறைவு :** *21-04-1964*

---

**திறன் :** கேட்டல் : ஒப்புவித்தலைக் கேட்டுப் புரிந்துகொள்ளுதல்.

கருத்துரை:-

இப்பூமியில் வாழும் மக்களைப் பார் ; அவர்கள் உலகெங்கும் பரவி வாழ்வதைப் பார் ; அவர்கள் உன்னுடன் பிறந்த பட்டாளம்; ஒரே குலமாய் உன்னுடன் ஒட்டி வாழப்பிறந்த பெருங்கடல்; இவற்றை எண்ணி மகிழ்ச்சி கொள். உன் அறிவை ஆழமாக்கு; அகலமாக்கு. உன் அகன்ற பார்வையால் மக்களினத்தை நம் இனம் என்று மனத்தில் ஏற்றுக்கொள். அவர்களுடன் இணைந்து கொள்; இரண்டறக் கலந்து விடு. 'நான் மானிடச் சமுத்திரம்; இங்குப் பிரிவும் இல்லை; வேற்றுமையும் இல்லை' என்று முழக்கமிடு.



## செயல்கள்

* *'**வெள்ளை நிறத்தொரு பூனை**' என்ற பாடலைக் கூறி, அதன் பொருளை விளக்குக.*

* *மாணவர்களே! குழுக்களாகப் பிரிந்து கொள்க. ஒரு குழு, பாடப் பகுதியில் உள்ள பாடலில் வரும் இரண்டடிகளைக் கூறுக. மற்றொரு குழு அதன் பொருளைக் கூறுக. இவ்வாறு இச்செயலைக் குழு மாற்றித் தொடர்ந்து செய்க.*

* *தனித்தனி மின்னட்டைகளில் பாடல் வரிகளை எழுதுக. பின்பு மின்னட்டைகளைக் கலந்துவிடுக. ஒவ்வொருவரும் ஒரு மின்னட்டையை எடுத்துப் படிக்க. பாடல் வரியமைப்புப்படி நிற்க / பாடுக.*

* ***'எல்லாரும் ஓர் குலம் ; எல்லாரும் ஓர் நிறை ;***

  ***எல்லாரும் இந்நாட்டு மன்னர் - ஆம்***

  ***எல்லாரும் இந்நாட்டு மன்னர்'.***

  *இப்பாடல் அடிகளைப் படிக்க. இதன் பொருளைக் கூறுக / எழுதுக.*

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

அறிவு பரந்த மகிழ்ச்சி

விரிவு பிறந்த விழுங்கு



### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

1. புவி ____________ 4. அகண்டம் ____________

2. சங்கமம் ____________ 5. கூவு ____________

3. பேதம் ____________ 6. பட்டாளம் ____________

### இ) சேர்த்து எழுதுக:-



அகண்டம் + ஆக்கு = ____________

பேதம் + இல்லை = ____________

பிரிவு + இலை = ____________

நான் + என்று = ____________

### ஈ) கோடிட்ட இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக:-



1. பாரடா உனது ____________ பரப்பை **(மானிட / மாணிட)**

2. ____________ விரிவு செய். **(அரிவை / அறிவை)**

3. மக்களை அணைந்து ____________ **(கொல் / கொள்)**

4. ____________ எங்கும் பேதமில்லை. **(பிறிவிலை / பிரிவிலை)**

## உ.) முதல் எழுத்தை மாற்றி வேறு வேறு சொற்களாக்குக:-




1. பேதம்
2. ________
3. ________
4. ________
5. ________
6. ________

1. எங்கும்
2. ________
3. ________
4. ________
5. ________
6. ________




## ஊ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. கவிஞர் எவற்றைப் பார்த்து மகிழ்ச்சிகொள் என்று கூறுகிறார்?
2. பரந்த மக்கள் பரப்பைக் கண்டு நாம் செய்ய வேண்டுவன யாவை?
3. 'பிரிவிலை எங்கும் பேதம் இல்லை' - என்னும் பாடல் வழியாய்க் கவிஞர் கூறும் கருத்துகளைத் தொகுத்துக் கூறுக.

*'புதியதோர் உலகு செய்வோம் - கெட்ட*
*போரிடும் உலகத்தை வேரொடும் சாய்ப்போம்'.*

*-பாரதிதாசன்*

# 2 திரும்பும் திரையெங்கும் கணினியே!





**பூங்குன்றன்** : அருள்! என் அக்காள் பணிபுரியும் கணினி மையத்திற்குச் சென்று அதனைப் பற்றித் தெரிந்து கொள்வோமா?

**அருள்** : சரி.. பூங்குன்றா! எனக்கும் கணினியை நேரில் பார்க்கவேண்டும் என்று நீண்ட நாள் ஆசை.

(இருவரும் பூங்குன்றனின் அக்காள் பணிபுரியும் கணினி மையத்தை அடைகின்றனர்.)

**பூங்குன்றன்** : அக்கா...

**தீபா** : வா... பூங்குன்றா! வா... அருள்!

**அருள்** : பூங்குன்றா! அதோ பார்! 'டைனோசரஸ்' படம். அக்கா... இதை இவ்வளவு பெரியதாக வரைந்தது யார்?

**தீபா** : இதைக் கணினிதான் வரைந்தது.

**அருள்** : அக்கா... அந்தக் கணினியைப் பார்க்க வேண்டுமே!

**தீபா** : அப்படியா...! உள்ளே வாருங்கள். பார்க்கலாம்.

**அருள்** : என்ன அக்கா! இந்த அறை முழுவதும் சின்னச் சின்னத் தொலைக் காட்சிப் பெட்டிகள் நிறைய உள்ளன?

---

***திறன் : முன்னறிமுகம் இல்லாத சூழலில் உரையாடல்கள், கலந்துரையாடல்கள் போன்றவற்றைப் புரிந்துகொள்ளுதல்.***

தீபா : அருள்! இவை தொலைக்காட்சிப் பெட்டிகள் அல்ல. இவைதாம் கணினிகள். இதோ... இதுதான் கணினியின் 'திரை' (மானிட்டர்). இது தட்டச்சு அமைப்பில் அமைந்த விசைப் பலகை (கீ போர்டு). இது, இதன் 'அச்சுப்பொறி' (பிரிண்டர்). இது சி.பி.யு. எனக் கூறப்படும் 'மையச் செயலகம்'. இதுதான் கணினியின் மூளை போன்ற பகுதி. இந்த அமைப்புகள் சேர்ந்ததுதான் **'கணினி'**.

அருள் : ஓகோ! இதுதான் கணினியா? இது கண்டு பிடிக்கப்பட்ட வரலாற்றைக் கொஞ்சம் கூறுங்கள் அக்கா.



தீபா : கி.பி.1834 இல் இங்கிலாந்தைச் சேர்ந்த **'சார்லஸ் பாப்பேஜ்'** கணிதச் செயல்பாடுகளைச் செய்ய ஒரு புதிய கருவியை வடிவமைத்தார். இதுவே கணினி உருவாகக் காரணமாக அமைந்தது. அதனால் இவரைக் **'கணினியின் தந்தை'** எனப் போற்றுவர் **'ஜெ.பிராஸ்பர் எக்ரேட்'** என்பவரும் **'ஜான் மாக்லே'** என்பவரும் இணைந்து 1946 இல் மின்னணுக் கணினியைக் கண்டு பிடித்தனர். இதுவே முதல் 'கணினிக் குழந்தை' ஆகும்.



**பூங்குன்றன்** : அக்கா! 'கணினி பாரு கண்ணாலே; கணக்குப் போடும் தன்னாலே', என்ற பாடலைப் படித்து இருக்கிறேன். அப்படியென்றால் கணினி கணக்கு மட்டும்தான் போடுமா?

**தீபா** : பூங்குன்றா! கணினி முதலில் கணக்குப் போடத்தான் பயன்படுத்தப்பட்டது. ஆனால், இன்று பொறியியல், மருத்துவம், வாணிகம், வங்கி, வேளாண்மை, கல்வி, வானியல் போன்ற பல துறைகளில் அரிய பல விந்தைச் செயல்களைச் செய்கின்றது.

**அருள்** : அக்கா... கணினி அப்படி என்ன விந்தையான செயல்களைச் செய்கிறது?

**தீபா** : தம்பி! வானூர்தி, ஏவுகணை, இராக்கெட் போன்ற பல சாதனங்களைக் கணினி இயக்குகிறது. வானில் வலம் வரும் செயற்கைக் கோள்களைக் கட்டுப்படுத்துவதும் இயக்குவதும் இதுவே. இயந்திர மனிதன் (ரோபோ) கூடக் கணினியால் இயங்குகிறது. கிரிக்கெட் போன்ற விளையாட்டுகளை உடனுக்குடன் காண்பதற்கும் கணினி உதவுகிறது.

**பூங்குன்றன்** : அக்கா! இன்று காலையில் நம் வீட்டிற்கு வந்த திருமண அழைப்பிதழைப் படித்தேன். அதில் 'பாரதி கணினி அச்சகம்' என்று அச்சிடப்பட்டிருந்தது. அச்சுத் தொழிலிலும் கணினி பயன்படுகிறதா?



தீபா : ஆம்... அழைப்பிதழ் மட்டுமல்ல இன்று செய்தித்தாள் வெளியீட்டிலும், புத்தகங்கள் அச்சிடுவதிலும் அதன் பங்கு அளப்பரியது. அச்சுக் கோப்பு, படக்கலவை, வண்ணமேற்றல் போன்ற பணிகளையும் கணினி அற்புதமாகச் செய்கிறது. அத்துடன் பல இலட்சம் பிரதிகளை மிக விரைவாக அச்சிட்டுத் தருகிறது.

அருள் : அக்கா... கணினியின் செயல்பாடுகள் இன்னும் ஏதேனும் உள்ளனவா?

தீபா : அருள்... இன்று வளர்ந்து வரும் உலக நாடுகளில் கணினியின் பங்கு அதிகம்; தொழில் வளர்ச்சியில் பல சாதனைகள் புரிகிறது; தொழிற்சாலைகளில் இயந்திரங்களை இயக்கவும் கட்டுப்படுத்தவும் உதவுகிறது. மருத்துவத் துறையில் நோய் அறி ஆய்வுகளை நுட்பமாகச் செய்து தருகிறது; 'அறுவை சிகிச்சை' செய்யவும் உதவுகிறது.

நாம் இருந்த இடத்திலேயே உலகின் எந்த மூலையிலிருந்தும் நமக்குத் தேவைப்படும் எந்தத் துறையைச் சார்ந்த தகவல்களையும் ஆலோசனைகளையும் 'கணினி' மூலம் உடனுக்குடன் பெற முடியும். இதற்குத் **'தகவல் வலையம்'** (இண்டர்நெட்) என்று பெயர்.

அருள் : அக்கா... அறிவியல் கண்டுபிடிப்புகளுள் கணினிதான் மிகச் சிறப்பானதா?

**தீபா** : ஆம் தம்பிகளே! அறிவியல் கண்டுபிடிப்புகள் பலவும் மனிதனின் உடல் வன்மைக்கு வலிமை சேர்ப்பவை. ஆனால் இந்நூற்றாண்டின் கண்டுபிடிப்பான கணினியோ மனித மூளைக்கு வலுவூட்டும் விந்தைமிகு கருவியாகும். கடந்த ஐம்பது ஆண்டுகளில் இத்துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் வேறு எந்தத் துறையிலும் ஏற்படவில்லை. இவ்வளவு பயனுள்ள கணினியைப் பயன்படுத்த நீங்களும் இன்று முதல் கற்றுக்கொள்ளலாமே!

**பூங்குன்றன், அருள்** : நன்றி! அக்கா!

> *தமிழர்க்குத் தமிழ்மொழியிற் கவடிச் சாலை*
> *சர்வகலா சாலையைப்போல் எங்கும் வேண்டும்*
> *தமிழில்இலாப் பிறமொழிநூல் அனைத்தும் நல்ல*
> *தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும்.*
>
> -பாரதிதாசன்



## செயல்கள்

- ★ *கோழி வளர்ப்பு, தேனீ வளர்ப்பு, பட்டுப்பூச்சி வளர்ப்பு முதலியவை நடைபெறும் இடங்களுக்குச் சென்று அங்கு நடைபெறும் உரையாடல்களைக் கேட்டறிக / அறிந்தவற்றைக் கூறுக.*
- ★ *கணினியைப் பற்றி உரையாடுக.*
- ★ *தொலைக்காட்சி, வானொலி போன்றவற்றில் ஒளி, ஒலி பரப்பப்படும் கல்வி மற்றும் வாழ்க்கைக்குப் பயன்படும் உரையாடல்கள் / நேர் காணல்களைக் கேட்டு வகுப்பில் கூறுக.*
- ★ *நெசவு நெய்தல், மட்பாண்டம் வனைதல், கால்நடை மருத்துவமனை போன்ற இடங்களுக்குச் சென்று அங்கு நடைபெறும் உரையாடல்களைக் கேட்டு, அறிந்தவற்றைக் கூறுக.*

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

கணினி பொறியியல்

மருத்துவம் வாணிகம்

சார்லஸ் பாப்பேஜ்



### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

1. பொறி __________ 3. வாணிகம் __________
2. நுட்பம் __________ 4. வானியல் __________



### இ) சேர்த்து எழுதுக:-

வான் + ஊர்தி = __________

நூறு + ஆண்டு = __________

அளப்பு + அரியது = __________

தொழில் + சாலை = __________

### ஈ) ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல்லை எழுதுக:-

1. மானிட்டர் __________ 4. கால்குலேட்டர் __________
2. கீ போர்டு __________ 5. கார்ட்டூன் __________
3. பிரிண்டர் __________ 6. இன்டர்நெட் __________

### உ) பின்வரும் சொல்லில் உள்ள எழுத்துகளைப் பயன்படுத்திப் புதிய சொற்களை உருவாக்குக:-

தொலைக்காட்சி → காட்சி, __________, __________, __________

## ஊ) கோடிட்ட இடங்களை நிரப்பிப் படிக்க:-



1. கணினி முதலில் ____________ போடத்தான் பயன்பட்டது.
2. வானில் வலம்வரும் ____________ கட்டுப்படுத்துவதும் இயக்குவதும் கணினியே.
3. கணிப்பானை முதலில் வடிவமைத்தவர் ____________ ஆவார்.
4. புத்தகங்களை அழகாகவும் விரைவாகவும் அச்சிட்டு வழங்க ____________ உதவுகின்றது.

## எ) பேச்சு வழக்குச் சொற்களைத் திருத்தமாக எழுதுக:-

1. நேரமாச்சி, நா பள்ளிகொடத்துக்குப் போவணும்.

____________________________________________

2. ஒங்கிட்ட இருக்கிறதுல எனக்குக் கொஞ்சம் குடுக்கிறீயா?

____________________________________________

3. வா, போயி தண்ணி குடிச்சிப்பூட்டு வரலாம்.

____________________________________________

4. அவன் கையிலே மூணு முட்டாய் வைச்சிருக்கான்.

____________________________________________

5. நாம் போயி பூவை பெரிச்சுக்கிட்டு வந்திரலாம்.

____________________________________________

## ஏ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. கணினி உருவாகக் காரணமாக இருந்த செயல் யாது?
2. கணினி ஆற்றும் விந்தைச் செயல்கள் சிலவற்றைக் கூறுக.
3. அச்சுத் துறையில் கணினியின் செயல்பாடுகளை விளக்குக.
4. கணினி விந்தைமிகு கருவி - விளக்குக.

# 3 திரைகடல் ஓடி...



## கடல்

அன்புச் செல்வங்களே! வணக்கம்! என்ன சுற்றுமுற்றும் பார்க்கின்றீர்கள்! உங்கள் முன் பரந்து விரிந்து கிடக்கும் என்னைத் தெரியவில்லையா? தண்ணீர்... தண்ணீர்... தண்ணீர்! நான்தான்... கடல். என்னை 'ஆழி' என்றும் கூறுவர்.



உங்கள் முல்லை மலர்ப் பாதங்களை மெல்ல ஊன்றி நில்லுங்கள்; நுரைப் பூவை அள்ளி வந்து அலைக் கரங்களால் மெல்லத் தழுவுகின்றேன். அன்புடன் என் முன்னுள்ள மணல் விரிப்பில் உட்காருங்கள். உங்களுக்கு நண்டுகள் வேடிக்கை காட்டும். இதமான ஈரக்காற்று உங்களை மகிழ்விக்கும். நான் கடலோரம் வாழும் மக்களுக்குத் தாயாவேன்! தெய்வமாவேன்! என்னிடம் உள்ள வளங்கள் ஏராளம்! வகை வகையான மீன்கள்! விலையுயர்ந்த முத்துகள், பவளங்கள் அத்தனையும் உங்களுக்கே!

---

**திறன் :** முன்னறிமுகம் இல்லாத சூழலில் வசனங்களைக் கேட்டுப் புரிந்துகொள்ளுதல்



என் மடி மீது தவழ்ந்து ஊஞ்சலாடும் கட்டு மரங்கள்; ஓடியாடும் படகுகள்; அதோ தூரத்தில் நிற்கின்றனவே கப்பல்கள்... அவை எம் உறவினர்கள்; அவர்களோடு உரையாட விரும்புகிறீர்களா? அதோ... படகு வருகிறது; உங்களை ஏற்றிக் கொண்டு கப்பலிடம் அழைத்துச் செல்லும்; ஏறிச் செல்லுங்கள்.

## கப்பல்

வாருங்கள் குழந்தைகளே! நான்தான் கப்பல். 'மரக்கலம்', 'நாவாய்' என்றும் என்னை அழைப்பர். கடல்மீது பயணம் செய்ய என்னை உருவாக்கினார்கள். ஓடமாக, படகாக, கட்டுமரமாக, பாய்மரக் கப்பலாக, பயணிகள் கப்பலாக, சரக்குக் கப்பலாகத் தேவைக்கு ஏற்பப் பல வடிவங்களில் என்னை உருவாக்கினார்கள்.

குழந்தைகளே! அங்கே பாருங்கள்! போர் விமானம் கப்பலிலிருந்து பறந்து செல்கிறது... என்னே அழகு! இன்றைய அறிவியல் வளர்ச்சியில் நீர்மூழ்கிக் கப்பல், விமானம் தாங்கிக் கப்பல் என வளர்ந்துள்ளேன்.



தொலைபேசி, தொலைக்காட்சி, வானொலி, வழிகாட்டத் திசைகாட்டும் கருவி (ராடார்), ஆபத்துக் காலங்களில் உயிர் பிழைக்க உயிர் காக்கும் மிதவைப் படகுகள் எனப் பல வசதிகள் என்னிடம் உள்ளன. என்னை 'மிதக்கும் நகரம்' என்றும் கூறுவர். அலைமேல் அலையாய் எழும்பும் கடலில் ஆடியும் அசைந்தும் ஆனால் நகராமல் என்னால் எப்படி நிற்க



முடிகிறது? ஆம். நங்கூரத்தின் உதவியால்தான்!

அதோ! அங்கே என்னைப் போன்ற பல கப்பல்கள் நிற்பதைப் பாருங்கள்! அவ்விடம்தான் 'துறைமுகம்' எனப்படும். அங்கே சென்று துறைமுகம் கூறும் விவரங்களைக் கேளுங்கள்.

## துறைமுகம்

குழந்தைகளே! அயல் நாடுகளிலிருந்து வரும் கப்பல்களும் உள்நாட்டுக் கப்பல்களும் இங்கேதான் வந்து செல்கின்றன; நீர் மூழ்கிக் கப்பலும் போர்க் கப்பல்களும்கூட வருகின்றன; அவை தமக்குத் தேவையான எரிபொருள், உணவுப் பொருள், குடிநீர், மருந்துகள் போன்ற அனைத்துப் பொருள்களையும் இங்குதான் நிரப்பிக் கொள்கின்றன; சிறுசிறு பழுதுகளும் சரிசெய்யப்படுகின்றன.



எனக்கு உதவும் கரங்களாக இருப்பவை இரண்டு. ஒன்று கலங்கரை விளக்கம், மற்றொன்று பளுதூக்கும் இயந்திரம்.

அதோ! வானளாவ உயர்ந்து நிற்கும் கோபுர வடிவம்! ஆம், அதுதான் கலங்கரை விளக்கம். 'கரை இங்கே' என்று இரவில் ஒளி வீசிக் கப்பல்களுக்கு வழிகாட்டும் விளக்கே 'கலங்கரை விளக்கம்'.



கப்பலுக்கு அருகே, கொக்கிகளுடன் கூடிய கம்பங்கள், சாய்ந்து நிற்கின்றன தெரிகின்றனவா? அவை பெரிய பெரிய சரக்குப் பெட்டகங்களைக்கூட எளிதாகக் கப்பலில் ஏற்றவும், இறக்கவும், நகர்த்தவும் உதவுகின்றன. அவற்றைப் 'பளுதூக்கும் இயந்திரம்' (கிரேன்) என்பர்.

நம் நாட்டிற்குத் தேவையான பொருள்களை, இங்குதான் இறக்குமதி செய்கின்றனர். ஏற்றுமதிப் பொருள்களையும் என்மூலம்தான் அனுப்புகிறார்கள். இங்கு ஆயிரத்திற்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் தேனீக்கள் போன்று உழைக்கிறார்கள். பெருமழை, புயல், சூறாவளி, கடல் கொந்தளிப்பு ஏற்படும் காலங்களில் 'எச்சரிக்கைக் கொடி' என்னருகே ஏற்றப்படும்.

எனக்குப் பழம் பெருமைகளும் உண்டு. பழந்தமிழகத்தில் சந்தனம், மிளகு, கிராம்பு, ஏலம், தந்தம், பட்டு, முத்து, பவளம், மயில்தோகை ஆகியவை ஏராளமாகக் கிடைத்தன. இவற்றைப் பண்டமாற்று முறையில் என்மூலமாக வாணிகம் செய்தனர். அப்போது மாமல்லபுரம், பூம்புகார், காயல்பட்டினம், கொற்கை, தரங்கம்பாடி, திருமறைக்காடு (வேதாரண்யம்) போன்ற துறைமுகங்கள் சிறந்து விளங்கின.

மக்களுக்கு என்னால் ஆன உதவிகளைச் செய்வதைப் பெருமையாகக் கருதுகிறேன். நீங்களும் உங்களால் ஆன உதவிகளைச் செய்து பெருமை அடையுங்களேன்!

| | | |
|---|---|---|
| செயற்கைத் துறைமுகம் | - | சென்னை |
| இயற்கைத் துறைமுகம் | - | மும்பை |
| ஆற்றுத் துறைமுகம் | - | கொல்கத்தா |
| ஏரித் துறைமுகம் | - | சிகாகோ (அமெரிக்கா) |

சென்றிடுவீர் எட்டுத் திக்கும் - கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்!

- பாரதியார்



**செயல்கள்:-**

- 'திரைகடல் ஓடி' - பாடப் பகுதியை வசனமாகப் பேசுக.
- காடுகள் அழிவதால் விலங்குகளின் வாழ்க்கையே போராட்டமாகி விடுகிறது. இது குறித்து விலங்குகள் தாமே பேசுவதுபோல வசனம் பேசுக.
- பள்ளி மாணவர் தலைவனாக நீ தேர்ந்தெடுக்கப்பட்டால் எவ்வாறு நன்றி கூறுவாய்?
- நீ வளர்க்கும் ஒரு செல்லப் பிராணி உன்னிடம் பேசுவது போலக் கற்பனை செய்து பேசுக.
- பேருந்து நடத்துநர், அங்காடி விற்பனையாளர் பேசுவது போலப் பேசிக் காட்டுக.

## பயிற்சிகள்



**அ) படித்துப் பழகுக:-**

நான் கடலோரம் வாழும்
மக்களுக்குத் தாயாவேன்!
தெய்வமாவேன்! என்னிடம்
உள்ள வளங்கள் ஏராளம்.



**ஆ) அகராதியைப் பார்த்துப் பொருளறிக /எழுதுக:**

| | | | |
|---|---|---|---|
| திரை | ________ | பழுது | ________ |
| பாதங்கள் | ________ | இறக்குமதி | ________ |
| ஏற்றுமதி | ________ | பண்டமாற்று | ________ |

**இ) பிரித்து எழுதுக:-**

தாயாவேன் = ________ + ________

ஈரக்காற்று = ________ + ________

உதவிக்கரங்கள் = ________ + ________

போர்க்கப்பல் = ________ + ________

எச்சரிக்கைக்கொடி = ________ + ________

## ஈ) சேர்த்து எழுதுக:-



ஊஞ்சல் + ஆடும் = ________

கடல் + ஓரம் = ________

வளர்ந்து + உள்ளேன் = ________

வான் + ஒலி = ________

வான் + அளாவ = ________

## உ) பொருத்துக:-

| | | |
|---|---|---|
| புயல் | - | உயிர் காக்கும் |
| மிதவைப் படகு | - | கப்பலை நிறுத்த உதவும் |
| நங்கூரம் | - | வழிகாட்டும் |
| கலங்கரை விளக்கம் | - | எச்சரிக்கைக் கொடி |

## ஊ) கோடிட்ட இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக:-



1. உங்கள் ____________ மலர்ப் பாதங்களை மெல்ல ஊன்றி நில்லுங்கள்.
2. என்னை ____________ நகரம் என்றும் கூறுவார்கள்.
3. கப்பல்கள் நகராமல் நிலைநிறுத்தப் பயன்படும் கருவிதான் ____________
4. ஆயிரத்திற்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் ____________ போன்று உழைக்கிறார்கள்.

## எ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. கடலிலுள்ள வளங்கள் யாவை?
2. கடலில் செல்லும் சாதனங்களைப் பட்டியலிடுக.
3. கப்பல்களின் வகைகளைக் கூறுக.
4. துறைமுகத்தைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.

## ஏ) ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல் அறிக:-

ஹார்பர் - துறைமுகம்

ஷிப் - கப்பல்

போட் - படகு

லைட் ஹவுஸ் - கலங்கரை விளக்கம்

காம்பஸ் - திசைகாட்டும் கருவி

கிரேன் - பளு தூக்கும் இயந்திரம்

## ஐ) மரபுத் தொடர்கள் அறிக:-

வாழையடி வாழையாக - தலைமுறை தலைமுறையாக

கண்ணும் கருத்துமாய் - முழுக் கவனிப்புடன்

குருட்டுப் பாடம் - பொருள் தெரியாமல் படித்தல்

நாடோடி - ஊர் சுற்றுபவன் (நிலையாக ஓரிடத்தில் தங்காதவன்)

**கடல் ஒன்று, பெயர்கள் பல.**

*கடல், முந்நீர், வேலை, ஆழி, ஆர்கலி, புணரி, பவ்வம், பரவை, சமுத்திரம்.*

### இலக்கணம்

ஒரு மொழியைப் பிழை இல்லாமல் பேசவும் எழுதவும் துணை செய்வது மொழி இலக்கணம் ஆகும்.

தமிழ் இலக்கணம் ஐந்து வகைப்படும். அவை, **எழுத்து இலக்கணம், சொல் இலக்கணம், பொருள் இலக்கணம், யாப்பு இலக்கணம், அணி இலக்கணம் என்பனவாகும்.**

### வினாக்கள்:-

1. இலக்கணம் என்றால் என்ன?
2. ஐந்து வகை இலக்கணங்கள் யாவை?



# 4 அறிவுரை கேட்போம் அதன்வழி நடப்போம்

தலைமை ஆசிரியர் மாணவர்களை அழைத்தார். கல்விக் கண்காட்சி அமைப்பதன் நோக்கத்தை விளக்கினார். தம் பள்ளியில் எவ்வாறு கண்காட்சி அமைக்க வேண்டுமென அறிவுரை வழங்கினார்.

> *மாணவர்களே! குழுக்களாகப் பிரிந்துகொள்க! நுழைவு வாயிலை ஒப்பனை செய்க! பார்வையாளர்களை அன்புடன் வரவேற்க.*

மாணவர்கள் நான்கு குழுக்களாகப் பிரிந்து செயல்பட்டுக் கண்காட்சியை உருவாக்கினர். அதில் தனித்தனி அரங்குகளை அமைத்தனர். அந்த அரங்குகளைச் சென்று பார்ப்போமா!

**வரவேற்பு :**

மாணவர்கள் கண்காட்சியின் நுழைவு வாயிலை அழகாக வடிவமைத்திருந்தனர். ஒரு மேசையில் மலர்த் தட்டும் கற்கண்டும் வைத்திருந்தனர். கண்காட்சியைப் பார்க்க வருவோரைப் பன்னீர் தெளித்து சந்தனம், பூ, கற்கண்டு வழங்கி அன்புடன் வரவேற்றனர். அரங்குகளைப் பார்வையிட வழிகாட்டினர்.



**திறன் :** குழுச் செயல்பாடு ஒன்றிற்கான அறிவுரையை ஏற்றுச் செயல்படுதல்.

விலங்குகள், பறவைகள் வாழும் வனச் சூழலை உருவாக்குக.

**வனமே வாழ்வு :**



மாணாக்கர் அரங்கின் ஒரு பகுதியில் களிமண்ணைப் பரப்பியிருந்தனர். அதில் புல், செடி, கொடி, மரக்கிளைகள் போன்றவற்றைப் பொருத்தியிருந்தனர். இவற்றால் அது வனம் போலக் காட்சியளித்தது. சாதாரணக் காகிதங்களில் கரியைப் பூசி, அவற்றை வளைத்தும் இணைத்தும் மலைகள், பாறைகள் போலச் செய்திருந்தனர். குகைகளும் அமைக்கப்பட்டு இருந்தன. நீலவண்ணச் சுண்ணக் கட்டிகளைத் தூளாக்கி, வளைந்து ஓடும் நீரோடைகளை அமைத்து இருந்தனர். வனத்தில் ஆங்காங்கே சிங்கம், புலி, கரடி, வரிக்குதிரை, மான்கள், முயல்கள் போன்றவற்றின் உருவங்களை வைத்து இருந்தனர். அட்டையால் செய்யப்பட்ட பறவை உருவங்களை மரங்களில் இருப்பதுபோலவும் பறப்பது போலவும் அமைத்து இருந்தனர்.

'காட்டு வளமே நாட்டு வளம்.'
'மரம் வளர்ப்போம் ; மழை பெறுவோம்.'
'வனவிலங்குகளைக் காப்போம்.'

வேற்றுமையில் ஒற்றுமை என்பதை விளக்க ஒரு கூடாரம் அமைக்க.

**வேற்றுமையில் ஒற்றுமை :**

களிமண் கொண்டு செய்த இந்துக் கோவில், மாதா கோவில்,



மசூதி ஆகியவற்றின் மாதிரி வடிவங்களை அமைத்திருந்தனர். சுவரில் இந்தியாப் படம் பெரிதாக வரையப்பட்டிருந்தது. மாணவர்கள் இந்து, கிறித்தவர், முகமதியர் போல வேடமணிந்து கைகோத்து நின்றனர். அவர்தம் சட்டைகளில் 'நாங்கள் இந்தியர்' என்று எழுதிய அட்டைகள் ஒட்டப்பட்டிருந்தன. மாணவர்கள் ''நாம் இந்தியர் ; பிறப்பால் அனைவரும் சமம் ; எம்மதமும் சம்மதம் ; சாதி, மத, பேதம் சகிக்க முடியாத பாவம்'' - என உரத்த குரலில் முழங்கினர். இந்நிகழ்ச்சி பார்வையாளர்களின் கண்களையும் கருத்தையும் கவர்ந்தது.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்.'
'ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்.'
'ஒற்றுமையே வலிமை.'

## ஆதிமனிதன்

குரங்கிலிருந்து மனிதன் தோன்றி வளர்ந்த வரலாற்றை வேடமிட்டு நடித்துக் காட்டுக.

மாணவன் ஒருவன் இலை, தழையாடைகள் அணிந்து கொண்டு ஆதிகால மனிதனாக நின்றான். அவன் கையில் கல்லால் ஆன கருவிகள் இருந்தன. மற்றொரு மாணவன் பருத்தி ஆடைகள் அணிந்து கத்தி போன்ற இரும்பு ஆயுதங்களை வைத்திருந்தான். பிறிதொரு மாணவன் முழுக்கால் சட்டையும் மேற்சட்டையும் அணிந்து மிடுக்காக நின்றான். அவர்களின் பின்னணியில் அவர்கள் வாழ்ந்த வீடுகளின் மாதிரிகள் இருந்தன. உயிரோட்டமான அரங்கமாக அது விளங்கியது.

மனிதன் படிப்படியாக வளர்ந்த நிலையை அக்காட்சி அழகாக விளக்கியது. அந்த அரங்கிலேதான் பார்வையாளர்கள் அதிகமாகக் கூடி நின்றனர்.



மாணவர்களே! அரங்குகளைக் கண்டு மகிழ்ந்தீர்கள்! நீங்களும் உங்கள் பள்ளியில் கல்விக் கண்காட்சி அமைக்கலாமே!

> ☞ யாகாவா ராயினும் நாகாக்க
> ☞ அன்றறிவாம் என்னாது அறம் செய்க
> ☞ தன்னெஞ்சு அறிவது பொய்யற்க
> ☞ எனைத்தானும் நல்லவை கேட்க.
>
> -குறள்நெறி



### செயல்கள்

★ வகுப்பில் உள்ள மாணவர்கள் தூய்மைக் குழு, கல்விக் குழு, விளையாட்டுக் குழு எனப் பிரிந்து ஆசிரியர் அறிவுரைவழிச் செயல்படுக.

★ மதிய உணவு உண்ணும்போது வரிசையாக அமர்தல் ; சிந்தாது உண்ணுதல் ; கழிவுகளைக் கண்ட இடத்தில் போடாது தூய்மை காத்தல் முதலான ஒழுங்குமுறைகளை ஒரு குழு செயல்படுத்துக.

★ பள்ளியில் இலக்கிய மன்றம், அறிவியல் மன்றம், சுற்றுப்புறச் சூழ்நிலை விழிப்புணர்ச்சி மன்றம் முதலியவற்றை அமைத்துச் செயல்படுக.

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

கண்காட்சியின் நுழைவு வாயிலை அழகாக வடிவமைத்திருந்தனர்.



### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

அரங்கு - ____________ ஒப்பனை - ____________

வாயில் - ____________ வனம் - ____________



### இ) பிரித்து எழுதுக:-

நீரோடை = ____________ + ____________

மரக்கிளை = ____________ + ____________

காட்சியளித்தது = ____________ + ____________

வரிக் குதிரை = ____________ + ____________

### ஈ) சேர்த்து எழுதுக:-

வேடம் + அணிந்து = ____________

உயிர் + ஓட்டமான = ____________

அ + காட்சி = ____________

மேல் + சட்டை = ____________



### உ) கோடிட்ட இடங்களை நிரப்புக:-

1. ஆசிரியர், மாணவர்களைக் குழுக்களாகப் பிரித்து ____________ வழங்கினார்.
2. மாணவர்கள் நுழைவு வாயிலை ____________ வடிவமைத்திருந்தனர்.
3. மாணவர்கள் சட்டைகளில் 'நாங்கள் ____________' என்று எழுதிய அட்டைகள் ஒட்டப்பட்டிருந்தன.
4. பிறப்பால் ____________ சமம்.

ஊ) பள்ளியில் தோட்டம் அமைக்க உங்கள் ஆசிரியர் பின்வரும் அறிவுரைகள் கூறுகிறார். நீங்கள் எவ்வாறு செய்வீர்கள் என்று கூறுக / எழுதுக:-

1) பாத்திகள் அமைக்க
2) மண்ணைக் கொத்தி விடுக.
3) விதைகளை ஊன்றுக
4) நீர் ஊற்றுக
5) வேலி அமைக்க.
6) களையெடுக்க



எ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. வரவேற்புக் குழுவினர் அறிவுரைகளின்படி செய்த செயல்கள் யாவை?
2. அரங்கை வனமாக மாற்ற, வனக் குழுவினர் செய்த செயல்களை வரிசையாகக் கூறுக.
3. பார்வையாளர்களின் கண்களையும் கருத்தையும் கவர்ந்த நிகழ்ச்சி எது?
4. குரங்கிலிருந்து மனிதன் தோன்றியதை விளக்கிக் காட்ட மாணவர் செய்த செயல்கள் யாவை?

## இலக்கணம்

### எழுத்தின் வகை - தொகை

'அம்மா' இச்சொல்லைப் பாருங்கள். இதில் மூன்று எழுத்துகள் உள்ளன.

அ - உயிர் எழுத்து
ம் - மெய் எழுத்து
மா - உயிர்மெய் எழுத்து

**உயிர் எழுத்து** : **அ** முதல் **ஔ** வரை உள்ள பன்னிரெண்டு எழுத்துகளும் உயிர் எழுத்துகள் ஆகும். ஏனெனில் இவை உயிர்போல் நின்று பிற எழுத்துகளை இயக்குவதால் **'உயிர் எழுத்துகள்'** எனப்படுகின்றன.

**மெய் எழுத்து** : **க்** முதல் **ன்** முடிய உள்ள பதினெட்டு எழுத்துகளும் மெய் எழுத்துகளாகும். இவ்வெழுத்துகள்

உயிர் நின்று இயங்கும் உடல்போல் இருத்தலால் **'மெய் எழுத்துகள்'** எனப்படுகின்றன.

**உயிர்மெய் எழுத்து** : உயிர் எழுத்துப் பன்னிரெண்டும், மெய் எழுத்து பதினெட்டும் தனித்தனியே இணைந்து இருநூற்றுப் பதினாறு (12 x 18 = 216) உயிர்மெய் எழுத்துகள் பிறக்கின்றன. இவை உயிரும் மெய்யும் சேர்ந்து பிறத்தலால் **'உயிர்மெய்'** எனப்படுகின்றன.

**ஆய்த எழுத்து** : ஃ - இவ்வெழுத்து ஓர் ஆய்தத்தின் வடிவத்தைப்போல் உள்ளதால் 'ஆய்த எழுத்து' எனப்படுகிறது. இது உயிர் எழுத்துகளையோ, மெய் எழுத்துகளையோ போல் இல்லாமல் தனியாக இருத்தலால் **'தனிநிலை'** என்றும் கூறப்படும். இப்பொழுது தமிழ் எழுத்துகளின் தொகையை அறிவோமா?

| | | |
|---|---|---|
| உயிர் எழுத்துகள் | - | 12 |
| மெய் எழுத்துகள் | - | 18 |
| உயிர்மெய் எழுத்துகள் | - | 216 |
| ஆய்த எழுத்து | - | 1 |
| மொத்த எழுத்துகள் | - | 247 |

**வினாக்கள்:-**

1. உயிர் எழுத்துகள் எத்தனை? அவை யாவை?
2. மெய் எழுத்துகள் எத்தனை? அவை யாவை?
3. தமிழ் எழுத்துகளின் தொகையை விளக்குக.
4. உம் பாடப் பகுதியிலிருந்து ஐந்து சொற்களை எடுத்தெழுதுக. அவற்றில் உயிர், மெய், உயிர்மெய் எழுத்துகளைக் கண்டறிந்து பட்டியலிடுக.

| உயிர் எழுத்து | மெய் எழுத்து | உயிர்மெய் எழுத்து |
|---|---|---|
| | | |

# 5 உலகை மாற்றியது நானே..!



ஆகா! எவ்வளவு மகிழ்ச்சி! என்னே இன்பம்! ஏன் திகைக்கிறாய்? யார் பேசுவது என்றா? தம்பி! நீ கப்பல் செய்து மிதக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறாயே! அக்கப்பல் செய்யப் பயன்பட்ட தாள்தான் நான்! நீ பள்ளிக்குச் செல்கிறாய் ; பாடங்களைப் படிக்கிறாய் ; படித்தவற்றை எதில் எழுதுகிறாய்? என்மீதுதானே! ஆனால், நான் உருவான கதை உனக்குத் தெரியுமா? அறிய ஆர்வமாய் இருக்கிறாய் அல்லவா? 'என் கதை'யைக் கூறுகின்றேன், கேள்..!



வனங்களிலும், மக்கள் வாழும் இடங்களுக்கு அருகிலும் வானோங்கி வளர்ந்துள்ள மரங்களைப் பார்த்திருப்பாய்! அவற்றில் சில வகை மரங்களிலிருந்துதான் நான் உருவாக்கப் படுகிறேன்.

என்னை முதன்முதலில் உருவாக்கிய மனிதர் யார்? அவர்தாம் சீன நாட்டைச் சார்ந்த 'சாய்லுன்' என்பவர்.

---

**திறன் :** பேசுதல் ★ இயல்பாகவும் சரளமாகவும் பேசுதல்.

★ தெரிந்த எளிய தலைப்புகளில் பேசுதல்.

பிற நாட்டினர் என்னை உருவாக்கும் கலையை நீண்ட காலம் அறியவில்லை.

அப்படியானால், நான் உலகெங்கும் எவ்வாறு பரவினேன், என்று கேட்கிறாயா? சொல்கிறேன் கேள்! எட்டாம் நூற்றாண்டில் அரேபியர்கள், சீனாமீது படை எடுத்துச் சென்றனர். என்னை உருவாக்கத் தெரிந்த சிலரைத் தமது நாட்டிற்கு அடிமைகளாகக் கொண்டு சென்றனர். அவர்களிடமிருந்து அரேபியர்கள் கற்றுக் கொண்டனர். அரேபியர்களிடமிருந்து ஐரோப்பியர் கற்று, என்னை உருவாக்கும் விந்தையை உலகெங்கும் பரப்பினர்.



தொடக்கத்தில் என்னை எவ்வாறு உருவாக்கினார்கள் தெரியுமா? மூங்கில் போன்ற மரங்களை வெட்டிச் சிறுசிறு துண்டுகளாக்கினர்; நன்கு அரைத்துக் காய்ச்சிக் கூழாக்கினர். இதுவே, 'காகிதக் கூழ்' எனப்பட்டது. பிறகு அதில் உள்ள நீரை வடித்துக் கனமான தகடு போன்ற பொருளினால் அழுத்தி என்னை உருவாக்கினார்கள்.



தற்காலத்தில் பெரிய ஆலைகளில் நவீன இயந்திரங்களின் உதவியால் என்னை உருவாக்குகிறார்கள். மரத்துண்டுகளை அரைத்துக் கூழாக்குவதற்குப் பதிலாக இரசாயன முறையில் அமிலங்களில் வேகவைத்துக் காகிதக் கூழ் தயாரிக்கிறார்கள்.

என்னைத் தயாரிக்கப் பயன்படும் பொருள்களை நீ அறிவாயா? ஊசியிலை மரங்கள், மூங்கில், யூகலிப்டஸ், பருத்தி, சணல் கழிவு,கந்தைத் துணிகள், நார்கள், புற்கள், கரும்புச் சக்கைகள் போன்ற பொருள்களைக் கொண்டு என்னைத்

தயாரிக்கின்றனர். நான் தோன்றிய பிறகு மக்கள் எளிதாக எழுதத் தொடங்கினர். புத்தகங்களை அச்சிடுவது எளிதாயிற்று. ஆனால் நான் தோன்றுவதற்கு முன் மக்கள் எவற்றில் எழுதினார்கள் தெரியுமா?

சீன நாட்டினர் முதலில் மூங்கில் பட்டைகளில் எழுதினர். சுமேரியர்கள் களிமண்ணில் எழுதினார்கள். ஐரோப்பிய நாட்டினர் ஆட்டுத்தோல் அல்லது கன்றின் தோல்களில் எழுதினர். எகிப்து மக்கள் 'பப்ரைஸ்' என்ற நாணல் புல்லில் எழுதினர்.

தமிழ் நாட்டினர் 'பனை ஓலை'களில் எழுதினர். இதற்கு 'ஓலைச் சுவடிகள்' என்று பெயர். முக்கியமான செய்திகளைப் பட்டுத் துணிகளில் வண்ணக் குழம்பினால் எழுதினர். இதனைப் 'பட்டோலை' என்பர்.

நான் உருவான பிறகு பல நாடுகளும் என்னைப் பயன்படுத்தத் தொடங்கின. அந்நாடுகள் எனக்கு இட்ட பெயர்களையும் நீ அறிந்துகொள்ள வேண்டாவா? எகிப்து நாட்டினர் 'பப்ரைஸ்' தாளில் எழுதியதால் என்னைப் 'பேப்பர்' என்று அழைத்தனர். அரேபியர், 'காகத்' என்றனர். இதுவே, தமிழில் 'காகிதம்' என வழங்கப்படுகிறது. 'கடுதாசி' என்று நாம் சொல்லுவது போர்த்துகீசிய மொழிச் சொல்.

இன்று நான் புகாத இடமே இல்லை. நூலாக, செய்தித் தாளாக, படமாக, எழுதும் சுவடியாக... ஏன்? பணமாகவும் பார் புகழப் பவனி வருகின்றேன்.

உன்னைப் போன்றவர்களின் கையில் புத்தகமாக விளங்குவதும் நானே! எனது வருகையால் எண்ணற்ற நூல்கள் தோன்றின. படித்தவர் தொகை பெருகியது; புதிய கண்டுபிடிப்புகளினால் அறிவியல் வளர்ந்தது. மக்களின் வாழ்க்கை முறை மாறிவிட்டது. ஏன்?... உலகமே மாறிவிட்டது. *இப்பொழுது கூறுங்கள்! உலகை மாற்றியது நான்தானே!*



## செயல்கள்

★ அஞ்சல் அட்டை தன் பயணத்தைத் தானே கூறுவது போல் கூறுக.

★ பின்வரும் பொருள்களில் உனக்கு விருப்பமான ஏதேனும் ஒரு பொருள்பற்றி ஒரு நிமிடம் தொடர்ந்து பேசுக.

தக்காளி  மாம்பழம்  சட்டை  பேனா

★ கொடுக்கப்பட்டுள்ள விழாக்கள் பற்றிப் பேசுக.

பொங்கல்  தீபாவளி  கிறித்துமஸ்  இரம்ஜான்

★ கீழ்க்காணும் பொருள்கள் தம் பயன்களைத் தாமே கூறுவதுபோலப் பேசுக.

தொலைக்காட்சி  வானொலி

★ நீ ஊராட்சி மன்றத் தலைவரானால் ஊர் மக்களுக்கு என்னென்ன நன்மைகளைச் செய்வாய்? கற்பனை செய்து பேசுக / எழுதுக.

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

ஆகா! எவ்வளவு மகிழ்ச்சி! என்னே இன்பம்!
ஏன் திகைக்கிறாய்? யார் பேசுவது என்றா?

### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக. / எழுதுக:-



ஆலை ________  நவீன ________

புகாத ________  விந்தை ________

பவனி ________  பார் ________

## இ) பிரித்து எழுதுக:-



வானோங்கி = ________ + ________

உலகெங்கும் = ________ + ________

படையெடுத்து = ________ + ________

மரத்துண்டு = ________ + ________

காகிதக்கூழ் = ________ + ________

## ஈ) தடித்த சொல்லுக்கு, எதிர்ச் சொல்லை எழுதித் தொடரை நிறைவு செய்க:-



1. சூரிய காந்தி ____________ மலர். முல்லை **சிறிய** மலர்.
2. போக்குவரத்துச் சாதனங்கள், **கடினமான** பயணத்தையும் ____________ பயணமாக்கிவிட்டது.
3. **வரவுக்கு** அதிகமாகச் ____________ செய்யக் கூடாது.
4. **வெற்றியும்** ____________ வீரனுக்கு அழகு.

## உ) கோடிட்ட இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக:-



1. எட்டாம் நூற்றாண்டில் ____________ சீனாவின் மீது படையெடுத்துச் சென்றனர்.
2. தமிழ்நாட்டினர் ____________ எழுதினார்கள்.
3. தற்காலத்தில் பெரிய ஆலைகளில் நவீன ____________ உதவியால் காகிதம் தயாரிக்கப்படுகிறது.
4. எகிப்து மக்கள் ____________ என்ற நாணல் புல்லில் எழுதினார்கள்.
5. ____________ பார் புகழப் பவனி வருகின்றேன்.

## ஊ) கொடுக்கப்பட்டுள்ள சொற்பட்டியலிலிருந்து பொருத்தமானவற்றை இணைக்க:-

ஐரோப்பா, பப்பரைஸ், சீனா, ஆட்டுத் தோல், தமிழ் நாடு, களிமண், எகிப்து, மூங்கில், பனை ஓலை, சுமேரியா

| | |
|---|---|
| பனை ஓலை | தமிழ் நாடு |
| | |
| | |
| | |
| | |

## எ) பொருள் வேறுபாடு அறிக:-

| | | | |
|---|---|---|---|
| மரம் | - தாவரம் | மறம் | - வீரம் |
| அரிய | - கடினமான | அறிய | - தெரிந்துகொள்ள |
| பனை | - மரம் | பணை | - மூங்கில் |
| புல் | - சிறுதாவரம் | புள் | - பறவை |



## ஏ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. காகிதம் தயாரிக்கும் முறையை முதன்முதலில் கண்டு பிடித்தவர் யார்? அவர் எந்நாட்டினர்?
2. காகிதம் உலகெங்கும் எவ்வாறு பரவியது?
3. தொடக்கத்தில் காகிதம் எவ்வாறு உருவாக்கப்பட்டது?
4. காகிதம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்னால் உலக மக்கள் எவற்றிலெல்லாம் எழுதினார்கள்?
5. காகிதத்திற்கு வழங்கும் பெயர்களையும், அவை தோன்றிய விதத்தையும் கூறுக.

# 6 கடிகாரம் வேண்டுமோ?





சேவற் கோழியுண்டு ; காகமுண்டு - வானம்
செக்கச் சிவந்து தெரிவதுண்டு :
மேவு பொன்னே ! அதிகாலை தெரிந்திட
வேறும் கடிகாரம் வேண்டுமோடி?



செங்கதிர் பொங்கி வருவதுண்டு - நல்ல
செந்தா மரைகள் மலர்வதுண்டு ;
மங்கையே! காலைப் பொழுதை யுணர்த்திட
மற்றும் கடிகாரம் வேண்டுமோடி?



தன்னிழல் தன்னடி யாவதுண்டு - சுடர்
தானும் தலைநேர் எழுவதுண்டு :
இன்னமுதே! பகல்உச்சி யிதென்றிட
ஏதும் கடிகாரம் வேண்டுமோடி?



முல்லையரும்பு விரிவ துண்டு - ஆம்பல்
மொட்டுகள் மெல்ல அவிழ்வதுண்டு :
மெல்லியலே! மாலை வேளை யறிந்திட
வெள்ளிக் கடிகாரம் வேண்டுமோடி?



அம்புலி நட்சத்தி ரங்களுண்டு - கணக்கு
ஆக்கியறிய வழிகளுண்டு ;
இன்பமே! இரவில் நேரம் அறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி?



காலை மாலை எந்த வேளையும் - சூரிய
காந்தி மலர்தானே காட்டிடாதோ?
வேலை யெழுந்த திருவே! உனக்கினி
மேலும் கடிகாரம் வேண்டுமோடி?

- கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

---

**திறன் : சூழ்நிலைகளையும் நிகழ்ச்சிகளையும் விவரித்தல்.**

## ஆசிரியர் குறிப்பு :

இவர் கி.பி. 1876 ஆம் ஆண்டு கன்னியாகுமரி மாவட்டம் தேரூரில் பிறந்தார். இவரது தந்தை சிவதாணு, தாயார் ஆதிலட்சுமி. ஆசிரியராகப் பணிபுரிந்த இவருக்குக் 'கவிமணி' என்ற பட்டப் பெயர் வழங்கப்பட்டது. இவரது பாடல்கள் எளிமையும் இனிமையும் நிறைந்தவை. 'ஆசிய ஜோதி', 'மலரும் மாலையும்' போன்றவை இவர் இயற்றிய நூல்கள். கவிமணி 1954 ஆம் ஆண்டு புகழுடம்பு எய்தினார்.



## செயல்கள்

★ *'கடிகாரம் வேண்டுமோ?' - என்ற பாடலில் வரையப்பட்டுள்ள படங்களைப் பார்த்துக் காலை, மாலை, இரவுக் காட்சிகளை விவரிக்க.*

★ *கீழ்க்காணும் சூழல்களையும் அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளையும் விவரித்துக் கூறுக / எழுதுக.*

*1) அடைமழை நாள் 2) மாலைநேரக் கடற்கரைக் காட்சி*

*3) வண்டிப் பந்தயம் 4) மட்டைப்பந்துப் போட்டி (கிரிக்கெட்)*

★ *கிராம அங்காடிக்குச் சென்று அங்கு நடக்கும் பணிகளை விவரித்துக் கூறுக / எழுதுக.*

★ *முழுநிலா நாளில் சிறுவர் சிறுமியர் விளையாடும் விளையாட்டுகளை விவரிக்க.*

★ *உன் ஊரில் மருத்துவமனை அமைந்துள்ள சூழல் / நடைபெறும் பணிகள் ஆகியவற்றை விவரிக்க.*

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

| | |
|---|---|
| கோழியுண்டு | எழுவதுண்டு |
| விழிகளுண்டு | அவிழ்வதுண்டு |

## ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக/ எழுதுக:-



| | | | |
|---|---|---|---|
| 1. சிவந்து | ________ | 5. அம்புலி | ________ |
| 2. மேவு | ________ | 6. அவிழ்தல் | ________ |
| 3. கதிர் | ________ | 7. வேலை | ________ |
| 4. ஆம்பல் | ________ | 8. திருவே | ________ |



## இ) பிரித்து எழுதுக:-

கோழியுண்டு = ________ + ________

தன்னிழல் = ________ + ________

இதென்றிட = ________ + ________

செந்தாமரை = ________ + ________

செங்கதிர் = ________ + ________

## ஈ) சேர்த்து எழுதுக:-

காலை + பொழுது = ________

உனக்கு + இனி = ________

முல்லை + அரும்பு = ________

காகம் + உண்டு = ________

தன் + அடி = ________

## உ) சொல்லுக்குரிய படத்தைப் பொருத்தி எழுதுக:-

அதிகாலை ________

இரவு ________

காலை ________

பகல் ________

**ஊ) ஒரு பொருளைக் குறிக்கும் வேறு சொற்களை எழுதுக:-**

1. சூரியன், கதிரவன், ________, ________
2. நிலா, ________, ________, ________.

**எ) கீழ்க் காணும் சொற்களைத் தொடரில் அமைத்து எழுதுக.**

(எ-டு) 1. பச்சைப் பசேலென்று - வயலில் பயிர்கள் பச்சைப் பசேலென்று வளர்ந்துள்ளன.

2. செக்கச் சிவந்த - ________________

________________

**ஏ) நிகழ்ச்சியை விவரித்து எழுதுக:-**

கோடைக்காலம்

கொளுத்தும் கோடை வெயில். நான்....



**ஐ) வினாக்களுக்கு விடையளிக்க:-**

1. அதிகாலை நேரத்தைக் கடிகாரம் இல்லாமல் அறிய உதவுவன யாவை?
2. காலைப் பொழுதை அறியும் வழிகள் யாவை?
3. மாலை வேளைக் காட்சியை விவரி.
4. இரவு நேரத்தை எவ்வாறு அறியலாம்?
5. 'கடிகாரம் வேண்டாம்' என்பதற்குக் கவிஞர் கூறும் காரணங்களை விவரி.

**பழந்தமிழர்கள் இரவு நேரத்தில் விண்மீன்களைப் பார்த்துத் திசையை அறிந்தார்கள். தற்காலத்தில் பறவைகளின் இயக்கங்களைக் கொண்டு நில அதிர்வை அறிகிறார்கள். எனவே, இயற்கையை உற்றுப் பார். ஏராளமான செய்திகளை அறிவாய்.**

# 7 காணக் கண் கோடி வேண்டும்!



மதிய உணவு இடைவேளைக்காகப் பள்ளியின் மணி ஒலித்தது. வகுப்பிலிருந்து மாணவர்கள் அணி அணியாய் வெளியேறினர்; புறாக் கூட்டங்களைப் போல மரநிழலில் வந்தமர்ந்தனர்; கொண்டு வந்திருந்த உணவை உண்ணத் தொடங்கினர்.

அப்போது அன்பழகி, கலையிடம், ''நேற்று மாலை நான் உன் வீட்டிற்கு வந்தேன். நீ உன் தந்தையோடு பொருட்காட்சிக்குச் சென்றிருந்ததாக உன் தாயார் கூறினார். பொருட்காட்சி எப்படி இருந்தது?'' என்று கேட்டாள். உடனே கவிதாவும், ''பொருட்காட்சி பார்த்துவிட்டாயா? இவ்வாண்டு பொருட்காட்சியின் நுழைவு வாயில் அமைப்பில் ஏதேனும் புதுமைகள் உண்டா?''என்று கேட்டாள்.

''ஆமாம் கவிதா! நுழைவு வாயில் கல்விக் கூடம் போல் அமைக்கப்பட்டிருந்தது. அதில் **'கி.பி.2000- க்குள் அனைவருக்கும் கல்வி'** என்ற தொடர் நம்மை வரவேற்பதைப் போல இருந்தது.



நுழைவு வாயிலை அடுத்து உள்ளே சென்றால், அச்சத்தை ஊட்டும் ஒரு விலங்கின் உறுமல் ; அங்கே மிகப் பெரிய விலங்கு ஒன்றின் எலும்புக் கூடு. அது... தன் வாயை அடிக்கடி மெல்லத் திறந்து அசைத்து அச்ச உணர்வைத் தோற்றுவித்தது.

---

**திறன் :** சூழ்நிலைகளையும் நிகழ்ச்சிகளையும் விவரிக்கும் திறன்.



பார்வையாளர் அனைவரும் அதன் வாய் வழியாக நுழைந்து வாலின் வழியாக வெளியேற வேண்டும். அவ்விலங்கின் உட்புறம் விலங்குகள், பறவைகள் உயிரோடு இருப்பது போன்ற அமைப்பு. வெளியேறும் வால் பகுதியில் காண்போர் நெஞ்சை நெகிழ வைக்கும் வகையில் ஒரு காட்சி.

''அது, இன்று அரிதாகி வரும் உயிரினங்கள் கூட்டமாக நின்று, நம்மைப் பார்த்து உயிர்ப் பிச்சை கேட்டுக் கெஞ்சுவதைப் போல் அமைந்திருந்தது. அவற்றின் கீழே, 'எங்கள் இனங்களின் அழிவிற்கு நீங்களே காரணம்! இனியாவது எங்களை வாழவிடுங்கள்' என்ற வரிகள். அதைப் படித்ததும் என் கண்கள் கலங்கின'' என்று கூறி நிறுத்தினாள் கலை.

அன்பழகி, ''அடுத்து என்ன... சொல்'', என்றாள்.

''கலங்கி நின்ற என் உள்ளம் களிப்படையும் வண்ணம் இனிய இசை கேட்டது. அங்கே சென்றேன். செயற்கையாய் அமைக்கப்பட்டு இருந்த நீரூற்று என் கண்களைக் கவர்ந்தது. குதித்தாடும் நீரூற்று நடனம்; ஒவ்வொரு நீரூற்றின் அடியிலும் வண்ணமிகு மின் விளக்குகள்; அவை நீரூற்றை வண்ணக் கலவையாக்கிக் காட்டின.



சுற்றிலும் கொத்துக் கொத்தாய் மலர்களைச் சுமந்து நிற்கும் செடிகள். அவற்றின் நடுவே அமைக்கப்பட்ட பறவை, விலங்குகளின் பொம்மைகள். இக்காட்சி என்னை மிகவும் கவர்ந்தது'' என்றாள் கலை.

''கேட்கவே இவ்வளவு சுவையாய் இருக்கிறதே! இன்னும் சொல்,'' என்றாள் கவிதா.

''சொல்கிறேன் கேள்! நீரூற்றைக் கடந்து சென்றால் நம் மாநில அரசின் துறைகள் பலவற்றின் அரங்குகள். 'உண்டி கொடுத்து உயிர் கொடுக்கும், – வேளாண்துறை; 'இரும்பை உருக்கி இயந்திரமாக்கும்' - தொழில் துறை; 'கூடி வாழ்ந்தால் கோடி நன்மை' - கூட்டுறவுத் துறை; 'நாங்கள் உங்களுக்காகவே' - காவல்துறை. இவ்வாறு ஒவ்வொரு அரங்கின் முகப்பிலும் எழுதப்பட்டிருந்தன. அங்கு உள்ளோர், துறைகளின் செயல்பாடுகளை இன்முகத்தோடு விளக்கிக் கூறினர்.

இவற்றைக் கண்டு கால்கள் ஓய்ந்து நிற்கும் பொழுது 'உங்கள் கவனத்திற்கு' என்று ஒளிர்ந்த வரிகள் என் கண்களில் பட்டன. உள்ளே சென்றதும் ஈரக் காற்றால் உடல் சிலிர்த்தது. மலைச்சாரல் காட்சி; அதன்மீது செயற்கை மழைநீர்ப் பெருக்கு; அவை ஒன்று சேர்ந்து ஓடிவரும் ஆறு; இடையே கட்டப்பட்டுள்ள நீர்த்தேக்கம்; அதிலிருந்து பிரிந்து ஓடும் கால்வாய்கள்; அவை நிரப்பும் குட்டைகள், குளங்கள்; இவற்றால் வளம் அடையும் வயல்வெளிகள், தோப்புகள்; இக்காட்சி ஒரு பக்கம். இதன் மறுபக்கமோ...!

மரங்கள் அழிக்கப்பட்ட மலை; பஞ்சுப் பொதி போன்ற மேகங்கள்; வறண்ட காற்று; காய்ந்து கிடக்கும் ஆறு; அழகிழந்த ஆற்றுப் படுகை; நீரற்ற குட்டை, குளம்; அவற்றின் கரைகளெங்கும் குப்பை கூளங்கள், ஆலைக் கழிவுகள்; பாளம் பாளமாக வெடித்த வயல் வெளிகள்; பட்ட மரங்கள்; அவற்றின் முடிவில் வளமற்ற ஒரு கிராமத்தின் தெரு. அதில் நீர் சொட்டும் குழாய்! அங்கே கவலையோடு குடம் வைத்துக் காத்து நிற்கும் பெண்! அவள் பக்கத்தில் மிகப்பெரிய கேள்விக் குறி. 'நாளைய



குடிநீருக்கு என்ன செய்யப் போகிறீர்?', 'நீரை வீணாக்காதீர், நீரைச் சேமிப்பீர்' என்ற வரிகள். இதைக் கண்டு திகைத்து நின்றேன்.

அப்பொழுது அருகே இருந்த கலையரங்கிலிருந்து வந்த இனிய பாடல் என் சிந்தனையைக் கவர்ந்தது.

உள்ளே சென்றேன். கலையரங்கில் நம் பண்பாட்டை விளக்கும் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. கலையரங்கத்தின் முகப்பில், **'வளமான தமிழகம்' 'வலிமையான இந்தியா, உறுதியாக நாமும் உருவாக்குவோமே!'** என்று பளிச்சிட்ட தொடர்கள், என்னை மேலும் சிந்திக்கத் தூண்டின!

> நாடெங்கும் உள்ள கல்விக் கூடங்களே நான் செல்லும் ஆலயங்கள்; அவற்றில் கற்கும் மாணவச் செல்வங்களே நான் வணங்கும் தெய்வங்கள்.
>
> - ஜவஹர்லால் நேரு.



**செயல்கள்**

★ *பின்வரும் சூழல்களில் நடக்கும் நிகழ்ச்சிகள் பற்றி விவரித்துக் கூறுக / எழுதுக.*
*அ) மிருகக்காட்சி சாலை ஆ) கண்காட்சி*

★ *பள்ளியில் நடைபெற்ற விளையாட்டு விழா பற்றி விவரிக்க / எழுதுக.*

★ *உன் வீட்டிலிருந்து பள்ளி வரும்வரை நீ பார்த்த காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் விவரிக்க / எழுதுக.*

★ *உன் பள்ளியில் காலையில் நடைபெறும் வழிபாட்டு நிகழ்ச்சிகளை விவரித்துக் கூறுக / எழுதுக.*

★ ***களப் பயணம் :*** *அரிய பொருள்களைத் திரட்டி அனைவரும் காண வகைசெய்யும் இடமே 'அருங்காட்சியகம்'. அருகில் உள்ள 'அருங்காட்சியகம்' சென்று பார்க்க. பார்த்தவற்றை விவரித்து எழுதுக.*



## பயிற்சிகள்

### அ) படித்துப் பழகுக:-

மரங்கள் அழிக்கப்பட்ட மலை ; பஞ்சுப்பொதி போன்ற மேகங்கள்; வறண்ட காற்று; காய்ந்து கிடக்கும் ஆறு ; அழகிழந்த ஆற்றுப் படுகை;



### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

முகப்பு - ____________ ஒளிர்ந்த - ____________

களிப்படையும் - ____________ உண்டி - ____________

### இ) பிரித்து எழுதுக:-



பொருட்காட்சி = ____________ + ____________

மெல்லத் திறந்து = ____________ + ____________

உட்புறம் = ____________ + ____________

உயிரினங்கள் = ____________ + ____________

களிப்படையும் = ____________ + ____________

### ஈ) சேர்த்து எழுதுக:-

நீர் + ஊற்று = ____________

அழகு + இழந்த = ____________

கூட்டுறவு + துறை = ____________

மலை + சாரல் = ____________

நீர் + தேக்கம் = ____________

### உ) தடித்த சொல்லுக்கு உரிய எதிர்ச் சொல்லைக் கோடிட்ட இடத்தில் நிரப்பிப் படிக்க:-

1. மழை பெய்து **முடிந்ததும்** தலைவர் பேசத் ____________
2. காலத்திற்கேற்பப் ____________ ஆடை, ஆபரணங்கள் அணிந்தாலும் நமது **பழைமையான** பண்பாட்டை மறக்கக் கூடாது.

3. நாம் சாலையில் செல்லும் போது **இடப்புறமாகச்** செல்லவேண்டும்; ____________ செல்லக் கூடாது.

4. கடல் சிப்பியிலிருந்து ____________ முத்துகள் கிடைக்கின்றன. தற்காலத்தில் **செயற்கை** முத்துகளும் தயாரிக்கப்படுகின்றன.

## ண) பின்வரும் குறிப்புகளைப் பயன்படுத்தி, மாலை நேரக் காட்சியை விவரித்து எழுதுக:-

மாலை நேரம் - ஆடு, மாடுகள் வீடு திரும்புதல் - கதிரவன் மறைவு - சிறுவர் விளையாட்டு - வீடு திரும்புதல், பறவைகள் ஒலி - இலேசாக இருள் பரவுதல் - விளக்குகளின் ஒளி

## எ) சொற்றொடரில் அமைத்து எழுதுக:-

1. கூட்டமாக ____________
2. இன்முகத்தோடு ____________
3. திகைத்து ____________
4. உறுதியாக ____________

## ஏ) பொருத்துக:-

| | |
|---|---|
| 1. நாங்கள் உங்களுக்காகவே | அ) கூட்டுறவுத் துறை |
| 2. உண்டி கொடுத்து உயிர் கொடுக்கும் | ஆ) அரிதாகி வரும் உயிர் இனங்கள் |
| 3. எங்கள் அழிவிற்கு நீங்களே காரணம் | இ) வேளாண்துறை |
| 4. கூடி வாழ்ந்தால் கோடி நன்மை | ஈ) காவல் துறை |



## ஐ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. நுழைவு வாயில் எவ்வாறு அமைக்கப்பட்டிருந்தது?
2. பொருட்காட்சியில் விலங்கின் எலும்புக் கூடு எவ்வாறு இருந்தது?
3. செயற்கை நீரூற்றின் அமைப்பை விவரி.

4. பொருட்காட்சியில் அமைக்கப்பட்டிருந்த மலைச்சாரல் காட்சியை விவரி.

5. காடுகள் அழிக்கப்படுவதால் ஏற்படும் தீமையைப் பொருட்காட்சியில் எவ்வாறு விளக்கியிருந்தனர்?

## இலக்கணம்

### குறில், நெடில் - மெய்யெழுத்துகளின் வகை.

மாணவர்களே! **'அ'** முதல் **'ஔ'** வரை உள்ள உயிரெழுத்துகளை ஒலித்துப் பாருங்கள். அ, இ, உ, எ, ஒ என்ற ஐந்து எழுத்துகளும் ஓசையில் குறைந்து ஒலிக்கின்றன. இவற்றை **'குறில்'** அல்லது **'குற்றெழுத்துகள்'** என்கிறோம்.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற ஏழு எழுத்துகளும் நீண்டு ஒலிப்பதை உணர்வீர்கள். இவற்றை **'நெடில்'** அல்லது **'நெட்டெழுத்துகள்'** என்கிறோம். க, கி, கு, கெ, கொ, போன்ற உயிர் மெய் எழுத்துகளும் குறைந்து ஒலிக்கின்றன. இவை **'உயிர்மெய்க் குற்றெழுத்துகள்'** எனப்படும். கா, கீ, கூ, கே, கை, கோ, கௌ போன்ற உயிர்மெய் எழுத்துகள் நீண்டு ஒலிக்கின்றன. இவை **'உயிர்மெய் நெட்டெழுத்துகள்'** எனப்படும்.

மெய்யெழுத்துகள் பதினெட்டு என்பதை அறிவீர்கள். அவற்றுள் வன்மையாக ஒலிக்கும் **க், ச், ட், த், ப், ற்** என்ற ஆறும் **வல்லினம்**.

**ங், ஞ், ண், ந், ம், ன்** இவை மென்மையாக ஒலிக்கின்றன. இவை ஆறும் **'மெல்லினம்'**.

மெய்யெழுத்துகளுள் சில வன்மையாகவும் இல்லாமல் மென்மையாகவும் இல்லாமல் இரண்டுக்கும் இடைப்பட்டு ஒலிப்பதை உணர்வீர்கள். அவ்வாறு ஒலிக்கும் **ய், ர், ல், வ், ழ், ள்** என்ற ஆறும் **'இடையினம்'**.

**வினாக்கள்:-**

1. குறில், நெடில் எழுத்துகள் யாவை?
2. மெய் எழுத்துகளின் மூன்று வகைகள் யாவை?

# 8 கொடை உள்ளம்

## (நாடகம்)



**காட்சி : ஒன்று**

| | | |
|---|---|---|
| இடம் | : | குமணனின் அரசவை |
| காலம் | : | காலை நேரம் |
| நாடக மாந்தர் | : | குமணன், புலவர் பெருஞ்சித்திரனார், அமைச்சர், வாயிற் காவலன். |

(அரசவையில் குமணன் அரியணையில் வீற்றிருக்கிறார்.)

**வாயிற்காவலன்** : வாழி அரசே! சோழ நாட்டிலிருந்து பெருஞ் சித்திரனார் தங்களைக் காண வந்துள்ளார்.

**குமணன்** : வாயிற்காவல! தண்டமிழ்ப் புலவரைத் தடை செய்யாதே! அழைத்து வா!

(புலவர் அரசவைக்குள் வருகின்றார். குமணன் ஓடிச் சென்று வரவேற்று)



**இறன் : நாடகங்களில் பங்கேற்றல்.**

குமணன் : சோழ வள நாட்டின் செந்தமிழ்ப் புலவரே! இனிய தமிழை எத்திக்கும் பரப்பும் பாவலர் ஏறே!... வருக... வருக. வளமெல்லாம் பெறுக! இதோ என் அரியாசனத்திற்கு இணையான சரியாசனம்! இதில் அமருங்கள்.

புலவர் : வாழி மன்னா...! வாழி...! தங்கு தடையின்றித் தமிழ் வளர்க்கும் கொங்குப் பகுதியின் தார் வேந்தே! நீ ஏந்திய கூர்வாளோ பகை ஒடுக்கும்; உன் செங்கோலோ அறம் வளர்க்கும்; உன் வெண்கொற்றக் குடையோ அண்டினோர்க்கு வாழ்வளிக்கும். நாடி வந்து இரப்போர்க்கு ஓடிச் சென்று உதவும் குமண வள்ளலே! நலிந்த இப்புலவனின் நல்குரவு தீர்க்க வேண்டுகிறேன்.

குமணன் : நற்றமிழ்ப் புலவரே! தமிழ் வளர்க்கும் தங்கள் வாழ்க்கையில் வறுமையா?

புலவர் : ஆம், அரசே! வறுமையால் வாடும் என் குடும்பத்தின் அவலத்தை எவ்வாறு உரைப்பேன்? பசியால் ஊன் வற்றி உடல் மெலிந்து உருக்குலைந்து போனாள் என் மனைவி; ஆடிப்பாடி மகிழ வேண்டிய என் அருமை மகளோ குரல் எடுத்து அழவும் சக்தியற்றுக் கிடக்கிறாள். அருமைத் தாயின் முகம் பார்த்துப் பசியால் அழுகிறது பச்சிளங் குழந்தை. அவளோ பாலில்லாததால் பால் நிலாவைக் காட்டிக் காட்டித் தானும் அழுகின்றாள். ஒருவேளை உணவிற்குக் குப்பைக் கீரைகளையாவது சமைக்கலாம் என்றாலோ உப்பிற்கும் வழியில்லை!...

குமணன் : போதும் புலவரே! போதும்! தங்கள் நிலை கேட்டு என் மனம் துடிக்கிறது. யாது வேண்டும்? தயக்கமின்றிக் கேளும்.... தமிழ்ப் புலவர்களின் வாழ்வை அழித்து வரும் வறுமையே! இனி இக்குமணனின் உயிர் உள்ளவரை புலவர்களின் வாழ்க்கையைச் சீரழிக்க உன்னை அனுமதிக்க மாட்டேன்.

**புலவர்** : அரசே! அல்லல்படும் என் இல்லாளின் இதயம் மகிழ வேண்டும். உன்னிடத்தில் யான் பெறும் செல்வத்தைக் களிற்றின் மீது ஏற்றிச் செல்ல வேண்டும். அதைக் காண்போர் எல்லாம் வியக்க வேண்டும். என் பிள்ளைகளும் அழுகையை மறக்க வேண்டும். வள்ளலே! அது மட்டுமின்றிப் புலவர்களுக்குப் பரிசில் நல்காத வேந்தர்கள் உன் கொடைத்திறம் அறிந்து வெட்கித் தலை குனிய வேண்டும். இதுதான் என் பேரவா?

**குமணன்** : இவ்வளவுதானே...! அமைச்சரே! புலவருக்குப் பொன்னையும் பொருளையும் பொதிப் பொதியாய் கட்டிக் களிற்றின் மீது ஏற்றி அனுப்ப ஏற்பாடு செய்யுங்கள்.

**அமைச்சர்** : அப்படியே செய்கிறேன் மன்னவா!

**புலவர்** : எம் வறுமை தீர்த்த வள்ளலே! நீடூழி வாழ்க!

**குமணன்** : புலவரே... முதலில் உம் பயணக் களைப்பு நீங்க உணவு உண்டு ஓய்வெடுங்கள். இன்று யானும் உங்களோடு அமர்ந்து விருந்துண்ணப் போகின்றேன்.

**புலவர்** : பூவுலகில் புதுமைகள் படைக்கும் தலைவ! குவலயம் உள்ள வரை உன் குலம் தழைக்கட்டும். நின் புகழ் நிலைக்கட்டும்!

**காட்சி** : இரண்டு

| | | |
|---|---|---|
| **இடம்** | : | பெருஞ்சித்திரனார் இல்லம் |
| **காலம்** | : | மாலை |
| **நாடக மாந்தர்** | : | பெருஞ்சித்திரனார், மனைவி, மகள். |

(பெருஞ் செல்வத்துடன் யானை மீது அமர்ந்து வந்த புலவர், தாம் ஏறி வந்த யானையை வீட்டின் வெளியே ஒரு மரத்தில் கட்டினார். பின்பு தம் இல்லத்தினுள் செல்கிறார்.)

**மனைவி** : (முக மலர்ச்சியுடன்) வாருங்கள்!... வாருங்கள்!

புலவர் : இனியவளே! வாசலில் சென்று பார். முதிரமலைக் கோமான் குமணன் நமக்களித்த பெருநிதியத்தையும் அவற்றைச் சுமந்து நிற்கும் களிற்றினையும் பார்.

மகள் : (மகிழ்ச்சியோடு) ஆ...ஆ...யானை...யானை...!



மனைவி : நம் குறை தீர வாரி வழங்கிய குமண வள்ளல் பல்லாண்டு வாழ்க! அன்பரே! இவ்வளவு பொருளையும் நம் சிறிய இல்லத்தில் எவ்விடம் வைப்பேன்? என்ன செய்வேன்?

புலவர் : என் இல்லாளே! முதிரமலைக் கோமான் வாரி வழங்கிய செல்வத்தை நாம் மட்டுமே துய்க்கலாமா? பெற்ற செல்வத்தின் பெரும் பயன் ஈதலே! ஆதலால், நம்மை வறுமையில் ஆதரித்து நின்ற அனைவருக்கும் அள்ளிக் கொடு; வறுமையில் அல்லற்படும் அனைவருக்கும் கொடு; இனிமேல் நம்மைச் சுற்றியுள்ள எவரையும் வறுமைத் தீ நெருங்கக் கூடாது.

என் அன்பே! நமக்கு நன்மை செய்தவர், செய்யாதவர் என்ற பாகுபாடு இன்றிப் பகுத்துக் கொடு ; பிறர் நலம்

காத்தலே பிறவியின் பயன் என்ற உயர் பண்போடு உதவு! இந்நற்செயலுக் கெல்லாம் என் அனுமதியை எதிர்பார்த்து நிற்காதே! குமணனின் பெயர் சொல்லி வாரிக் கொடு.

மனைவி : நல்லது துணைவரே! அப்படியே செய்கிறேன். வாழ்க குமண வள்ளல்! வளர்க அவன் கொடை உள்ளம்!

- முற்றும் -

''வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்''

**- வள்ளலார்**

''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்''

**- முதுமொழி**



செயல்கள்

★ *'கொடை உள்ளம்' - நாடகத்தை உணர்ச்சியுடன் நடிக்க.*

★ *உண்மை, அன்பு, நாட்டுப் பற்று போன்ற பண்புகளை விளக்கும் நாட்டுப் புறக் கதைகளை நடித்துக் காட்டுக.*

★ *வானொலி, தொலைக்காட்சியில் ஒலி, ஒளி பரப்பப்படும் நாடகங்களைக் கேட்க / நடித்துக் காட்டுக.*

★ *விடுதலைப் போராட்ட வீரர்களின் வாழ்வை நாடகமாக்கி நடித்துக் காட்டுக.*



## பயிற்சிகள்

### அ) படித்துப் பழகுக:-

'நீ ஏந்திய கூர்வாளோ பகை ஒடுக்கும் ; உன் செங்கோலோ அறம் வளர்க்கும் ; உன் வெண் கொற்றக் குடையோ அண்டினோர்க்கு வாழ்வளிக்கும்.'

## ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-



| | | | |
|---|---|---|---|
| 1. அரியணை | __________ | 5. களிறு | __________ |
| 2. தார் | __________ | 6. ஊன் | __________ |
| 3. அவலம் | __________ | 7. பொதி | __________ |
| 4. நல்குரவு | __________ | 8. குவலயம் | __________ |



## இ) பிரித்து எழுதுக:-

வளமெல்லாம் = ________ + ________

கூர்வாள் = ________ + ________

உருக்குலைந்து = ________ + ________

செந்தமிழ் = ________ + ________

சக்தியற்று = ________ + ________

## ஈ) சேர்த்து எழுதுக:-

பெருமை + நிதி = __________

தண்மை + தமிழ் = __________

அரி + ஆசனம் = __________

பல + ஆண்டு = __________

விருந்து + உண்டு = __________

## உ) கோடிட்ட இடங்களை நிரப்பி, உரிய ஒலிப்புடன் பேசிக் காட்டுக:-



வறுமையால் வாடும் என் __________ அவலத்தை எவ்வாறு உரைப்பேன்? பசியால் ஊன் __________ உடல் __________ உருக்குலைந்து போனாள் என் மனைவி ; __________ மகிழ வேண்டிய என் அருமை மகளோ, குரல் எடுத்து __________ சக்தியற்றுக் கிடக்கிறாள்.

**(அழவும், மெலிந்து, ஆடிப்பாடி, வற்றி, குடும்பத்தின்)**

## ஊ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. குமணன் புலவருக்கு ஆசனம் அளித்து அமரச் சொன்னவுடன் புலவர் வாழ்த்திக் கூறியன யாவை?
2. புலவரின் குடும்ப வறுமையைப் புலவரின் கூற்றில் கூறுக.
3. பரிசில் பொருள்களைப் பிறருக்கு வழங்கும்படித் தம் மனைவியிடம் புலவர் கூறியவற்றை உணர்ச்சியுடன் கூறுக.

# இலக்கணம்

## சொல்

கை, கல், மலர் - இவற்றைப் படியுங்கள்.

ல்க, லர்ம - இவற்றைப் படியுங்கள்.

முதல் வரிசையில் எழுத்து தனித்து வந்தும், பல எழுத்துகள் தொடர்ந்து வந்தும் பொருளைத் தருகின்றன. ஆனால் இரண்டாம் வரிசையில் எழுத்துகள் சேர்ந்து உள்ளன. ஆனால் பொருளைத் தரவில்லை.

எழுத்து தனித்து நின்றோ, ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகள் தொடர்ந்து நின்றோ பொருளைத் தருமாயின் அது சொல் எனப்படும்.

பூ, தை, கை - இவை **ஓரெழுத்துச் சொற்கள்**

பாடு, கல், மலை - இவை **ஈரெழுத்துச் சொற்கள்**

அம்மா, தென்னை, பள்ளி - இவை **மூவெழுத்துச் சொற்கள்**

## வினாக்கள்:

1. சொல் என்றால் என்ன?
2. உம் பாடப் பகுதியிலிருந்து ஓரெழுத்துச் சொற்கள், ஈரெழுத்துச் சொற்கள், மூவெழுத்துச் சொற்களை எடுத்து எழுதுக.



# 9 சுவைபடச் சொல்க! வெல்க!



## நிகழ்ச்சி அறிவிப்பு

நாள் : 14.07.'98

இடம் : ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, முதுகரை.

**செயலர்** : மதிப்புமிக்க அவைத் தலைவர் அவர்களே! போற்றுதற்குரிய தலைமை ஆசிரியர் அவர்களே! மாணவ மணிகளே! உங்கள் அனைவருக்கும் என் வணக்கம்.

**தமிழ்த்தாய் வாழ்த்து** : எல்லாம் வல்ல இயற்கையின் ஆற்றலை வணங்கித் தாய்மொழியாம் தமிழை வாழ்த்தி இப்பொழுது விழாவைத் தொடங்குவோம்.

(அனைவரும் எழுந்து நின்று தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடினர்.)

**வரவேற்புரை** : இந்நிகழ்ச்சிக்கு வருகை தந்துள்ள அனைவரையும் நம் பள்ளியின் தலைமை ஆசிரியர் வரவேற்பார்.

(தலைமை ஆசிரியர் வரவேற்புரை நிகழ்த்தி அமர்ந்தார்.)

**விழாத் தலைவர் உரை** : நம் பள்ளியின் மாணவர் மன்றத் தொடக்க விழாவை ஊராட்சி மன்றத் தலைவர் அவர்கள் தலைமை தாங்கி நடத்தித் தருவார்.

(விழாத் தலைவர், மாணவர் மன்றத்தைத் தொடங்கி வைத்து உரையாற்றினார்.)

## சொற்போர் நிகழ்ச்சி :

**சொற்போர் நிகழ்ச்சி** : இப்பொழுது நம் பள்ளி மாணவர்கள்

---

***திறன்கள்*** : *நிகழ்ச்சி அறிவிப்புகளைக் கூறுதல், சொற்போரைக் கேட்டுப் புரிந்து கொள்ளுதல், சொற்போர்களில் பங்கேற்றல்.*

பங்கேற்கும் 'சொற்போர்' நடைபெறும். 'அறிவியல் வளர்ச்சி ஆக்கத்திற்கே' என்ற அணியில் பாண்டியன், பூங்கோதை, எழிலன் ஆகியோர் தம் கருத்துகளை எடுத்துரைப்பர். 'அறிவியல் வளர்ச்சி அழிவிற்கே' என்ற அணியில் வளவன், இளவரசி, முகிலன் ஆகியோர் தம் அணிக்கு வலிமை சேர்ப்பர். மாணவர்களே! இரு அணியினரின் விவாதத்தைக் கூர்ந்து கேளுங்கள். தீர்ப்பை நீங்கள்தாம் கூற வேண்டும். பாண்டியன் அவர்கள் 'அறிவியல் வளர்ச்சி ஆக்கத்திற்கே' எனப் பேசுவார்.




பாண்டியன் : அவையை வணங்குகிறேன். இன்று உலகையே அறிவியல் முன்னேற்றி வருகிறது. இதை, மறுக்க முடியுமா? இன்று நம் வாழ்க்கையை வசதிமிக்கதாக மாற்றி உள்ளது எது? அறிவியல்தானே! மின் விளக்குகள், மின் விசிறிகள், மாவாட்டும் இயந்திரங்கள், சாறு பிழியும் கருவிகள் இவை அறிவியல் படைத்த மாற்றங்களல்லவா? அன்று ஏர் பூட்டி, கழனி உழுது, கவலை கட்டி நீர்ப்பாய்ச்சியதை நினைத்துப் பாருங்கள். இன்று இயந்திரக் கலப்பைகளும், நீர் இறைக்கும் இயந்திரங்களும் வேளாண்மையில் ஏற்படுத்தியுள்ள மாற்றங்களை எண்ணிப் பாருங்கள்; அறிவியலின் முன்னேற்றம் விளங்கும்.

வளவன் : வணக்கம். அறிவியல் முன்னேற்றம் மனிதர்களின் உடல் உழைப்பைக் குறைத்து விட்டது. வேளாண்மையில் பயன்படுத்தப்படும் பூச்சிக்கொல்லி மருந்துகளால் மனிதனுக்குப் புதிய புதிய நோய்கள் வருகின்றன. இரசாயன உரங்களால் நிலத்தின் வளமும் குறைகிறது. நல்ல நிலங்கள் எல்லாம் நஞ்சு நிலங்களாக மாறும் நிலை ஏற்பட்டுவிட்டதே! இதை மறுக்க உங்களால் முடியுமா? சிந்தித்துப் பாருங்கள்.

பூங்கோதை : அறிவிற் சிறந்தவர்களே! அறிவியலா நோய்களுக்குக் காரணம்? அம்மையும், பிளேக்கும், காலராவும் மக்களைக் கூட்டம் கூட்டமாய் அழித்தனவே! தொழு நோய்க்குக் காரணம் தெரியாமல் கதறிக்கதறி அழுதோர் எத்தனை பேர்? இவற்றை முற்றிலும் ஒழித்தது அறிவியல்தானே!

தடுப்பு மருந்துகள் மனித இனத்திற்குச் செய்துள்ள நன்மைகள் எத்தனை? நோய்கள் குறைந்ததால் மனிதனின் வாழ்நாள் அதிகரித்துள்ளதே! அதனால்தான் நம்மை வாழ வைக்கும் அருமருந்து அறிவியல் என்கிறேன். இதை உங்களால் மறுக்க முடியுமா?

இளவரசி : பண்டைக்கால மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தான்; நோயின்றி நீண்டநாள் வாழ்ந்தான். ஆனால், இன்றைய நிலை என்ன? பெருகிவரும் தொழிற்சாலைகளும் போக்குவரத்துச் சாதனங்களும் காற்றை மாசுபடுத்துகின்றன. அவற்றின் இரைச்சலால் செவிப் புலன்களும் பாதிக்கப் படுகின்றன. மாசடைந்த சுற்றுப்புறச் சூழலில் புதுப்புது நோய்கள் தோன்றியிருப்பதை அறிவியல் அணியினர் மறுக்க முடியுமா?

எழிலன் : என்ன வேடிக்கையான பேச்சு இது! போக்குவரத்துச் சாதனங்களால் தீமைகளா விளைகின்றன? இவற்றின் உதவியால் உலகையே ஒரு நொடியில் வலம் வந்து விடலாமே! நீரிலும் வானிலும் பயணம் செய்யலாமே! எண்ணிப் பார்க்க வேண்டாவா? உலகில் நடக்கும்

நிகழ்ச்சிகளை உடனுக்குடன் பார்க்கத் தொலைக் காட்சி, உலகளாவிய தகவல் தொடர்பிற்கு வானில் வலம்வரும் செயற்கைக் கோள்கள், அவற்றை இயக்கும் கணினிகள், இவையனைத்தும் வியப்பை அல்லவா தருகின்றன! அதனால், அறிவியல் ஆக்கத்திற்கே என்பேன்!

முகிலன் : என்ன! தொலைக்காட்சிப் பெட்டியால் நன்மையா? இன்று மாணவர்களின் படிப்பிற்கும் ஒழுக்கத்திற்கும் ஊறு விளைவிப்பது தொலைக்காட்சிதானே! திரைப்படங்கள் நமது பண்பாட்டைச் சீரழித்து வருகின்றனவே!

குழந்தைப் பருவம் ஓடியாடி விளையாடும் பருவம். இப்பருவத்தினரைத் தொலைக்காட்சிப் பெட்டிகள் ஒரே இடத்தில் முடக்கிவிடுகின்றன. மேலும் அவர்களின் சிந்தனை ஆற்றலைத் திசை திருப்புகின்றன. எனவேதான், அறிவியல் படைப்புகள் அழிவுப் பாதைக்கே அழைத்துச் செல்கின்றன என்கின்றேன் நான்.

செயலர் : மாணவர்களே! இவ்விழாவிற்கு வருகை தந்து அமைதி காத்த உங்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவிக்கின்றேன். இதுவரை இரு அணியினரும் நடத்திய சொற்போரைக் கேட்டீர்கள். இச்சொற்போரின் தீர்ப்புத்தான் என்ன? அறிவியல் படைப்புகள் அனைத்துமே அழிவை நோக்கிச் செல்கின்றனவா? அவற்றைப் பயன்படுத்தும் முறைகளால் அழிவுகள் விளைகின்றனவா? என்ற நோக்கில் சிந்தித்துப் பாருங்கள். முடிவை நீங்களே கூறுங்கள்.

**தமிழுக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகள்.**

- விளம்பரப் பலகைகள் தமிழாகட்டும்.
- கடைப் பெயர்கள் தமிழாகட்டும்.
- ஊர்ப் பெயர்கள், தெருப் பெயர்கள் தமிழாகட்டும்.
- குழந்தைகளின் பெயர்கள் தமிழாகட்டும்.
- எழுதும் எழுத்தெல்லாம் தமிழ் எழுத்தாகட்டும்.

– பேராசிரியர் வ.சுப.மாணிக்கனார்



## செயல்கள்

★ 'அறிவியல் ஆக்கத்திற்கே', 'அழிவிற்கே' என்ற தலைப்பில் சொற்போர் நடத்துக.

★ பாடத்தில் இடம்பெற்றுள்ள சொற்போருக்கு உன்னுடைய தீர்ப்பைக் கூறுக; கலந்துரையாடுக.

★ ஓர் அணியினர், 'தொலைக் காட்சி மாணவர் படிப்பைப் பாதிக்கிறது' என்றும், மற்றோர் அணியினர் 'மாணவர் படிப்புக்கு உதவி செய்கிறது' என்றும் விவாதம் செய்க.

★ கிளி, புறா போன்ற பறவைகளைக் கூண்டில் அடைத்து வீட்டில் வளர்ப்பது சரியா? தவறா? - சொற்போர் நடத்துக.

★ ஒரு செய்தித்தாளில் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பின்வருமாறு வெளிவந்துள்ளன. அந்நிகழ்ச்சிகளைத் தொகுத்து முன்னோட்டமாக அறிவிக்க.

**தொலைக்காட்சி - முதல் அலைவரிசை - காலை நிகழ்ச்சிகள்**

| | | | |
|---|---|---|---|
| 6.00 | மங்கள இசை | 8.00 | விடுதலைப் போராட்ட வீரர்கள் |
| 6.15 | குறள் விளக்கம் | 8.30 | 'தமிழால் முடியும்' - நாடகம் |
| 6.30 | சுற்றுப்புறத் தூய்மை | 9.00 | நாட்டுப்புறக் கலைகள் |
| 6.45 | மருத்துவத்தில் புதுமை | 10.00 | தொடக்கக் கல்வி ஒளிபரப்பு |

★ ஒரு பள்ளி ஆண்டு விழாக் கலை நிகழ்ச்சிகள் பின் வருமாறு அமைக்கப்பட்டுள்ளன. பார்வையாளர்கள் உள்ளம் கவரும்படி நிகழ்ச்சி அறிவிப்புகளைக் கூறுக:-

**கலை நிகழ்ச்சிகள்**

1. வரவேற்புப் பாடல் - நடனம்
2. பரத நாட்டியம்
3. ஒருமைப்பாடு - நாடகம்
4. குறவஞ்சி - நடனம்
5. சத்ரபதி சிவாஜி - நாடகம்
6. கும்மி

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

அம்மையும், பிளேக்கும், காலராவும் மக்களைக் கூட்டம் கூட்டமாய் அழித்தனவே! தொழு நோய்க்குக் காரணம் தெரியாமல் கதறிக்கதறி அழுதோர் எத்தனை பேர்?



### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

| | | | |
|---|---|---|---|
| அணி | = ________ | புலன் | = ________ |
| ஆக்கம் | = ________ | ஊறு | = ________ |
| கவலை | = ________ | முடக்கி | = ________ |
| வலம் | = ________ | கழனி | = ________ |

### இ) பிரித்து எழுதுக:-



சொற்போர் = ____________

பங்கேற்கும் = ____________

அருமருந்து = ____________

மாசடைந்த = ____________

### ஈ) சேர்த்தெழுதுக:-

எடுத்து + உரைப்பர் = ____________

உலகு + அளாவிய = ____________

இவை + அனைத்தும் = ____________

திரை + படங்கள் = ____________

### உ) எதிர்ச் சொல்லால் தொடரை நிறைவு செய்க / படிக்க:-



1. தாமரை, தான் மருத்துவர் ஆக வேண்டும் என்று கனவு கண்டாள் ; பிற்காலத்தில் அவள் கனவு ____________ ஆகியது.

2. கணிப்பொறி மூலம் ______________ கணக்குகளையும் **எளிதாகச்** செய்யலாம்.

3. வயல்களில் **செயற்கை** உரங்கள் இடுவதைவிட ______________ உரங்கள் இடுவது நன்மை தரும்.

4. நல்ல செயல்களால் ______________ விளையும். தீய செயல்களால் **தீமை** விளையும்.

5. சேமிப்பு அதிகரித்தால் நாட்டின் வளம் **பெருகும்.** சேமிப்புக் குறைந்தால் நாட்டின் வளம் ______________

## ஊ) குறிப்புகளின் உதவிகொண்டு நிரப்புக / படிக்க:-

1. கடினமான பொருள்.
2. கதிரவன் ஒளிவீசும் நேரம்.
3. நகை செய்யலாம்.
4. இது மணியான காப்பியம்.
5. தபால் அலுவலகம்.




## எ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. 'அறிவியல் ஆக்கத்திற்கே'- என்ற அணியில் பேசிய பாண்டியனின் கருத்துகளைக் கூறுக - எழுதுக.

2. எழிலன் கூறிய கருத்துகளைக் கூறுக.

3. பூச்சிக்கொல்லி மருந்துகளை வேளாண்மையில் பயன் படுத்துவதனால் ஏற்படும் விளைவுகள் யாவை?

4. காற்றை மாசுபடுத்துபவை எவை?

5. தொலைக் காட்சியின் நன்மைகளைச் சிந்தித்துக் கூறுக / எழுதுக.

## இலக்கணம்

### சொல்லின் வகைகள்

'பாரதியார் சிறந்த கவிஞர்' - இச்சொற்றொடரில் 'பாரதியார்' எனும் சொல் ஒருவரின் பெயரைக் குறிக்கிறது. இவ்வாறு பெயரைக் குறிக்கும் சொல் **'பெயர்ச்சொல்'** எனப்படும்.

'மாறன் பந்தை எறிந்தான்' -இச்சொற்றொடரில் **'எறிந்தான்'** என்ற சொல் மாறன் செய்த செயலைக் (வினை) குறிக்கின்றது. இவ்வாறு செயலை / வினையைக் குறிக்கும் சொல் **'வினைச் சொல்'** எனப்படும்.

'பள்ளிக்குச் செல்' - இதில் பள்ளிக்கு என்பதில் உள்ள 'கு' என்னும் எழுத்து பெயரையும் வினையையும் இடமாசக் கொண்டு வரும் சொல். இது **'இடைச்சொல்'** எனப்படும்.

'நனி மகிழ்ந்தான்' - இச்சொற்றொடரில் 'நனி' என்ற சொல் 'மிகவும்' என்ற பொருளைத் தருகிறது. இங்ஙனம் பெயரையும் வினையையும் சார்ந்து அவற்றின் தன்மையை விளக்குவது **'உரிச்சொல்'** எனப்படும். இவை செய்யுளுக்கே உரியவை.

### வினாக்கள் :-

1. சொல் எத்தனை வகைப்படும்? அவை யாவை? ஒவ்வொன்றிற்கும் எடுத்துக்காட்டுகள் தருக.
2. உம் பாடப் பகுதியில் உள்ள பெயர், வினை, இடை, உரிச் சொற்களை எடுத்தெழுதுக.

| பெயர்ச்சொல் | வினைச்சொல் | இடைச்சொல் | உரிச்சொல் |
|---|---|---|---|
| | | | |

# 10 பார்ப்போம்! படிப்போம்!



செல்வம் சுறுசுறுப்பான மாணவன். ஒரு ஞாயிற்றுக் கிழமை அவன் சிற்றப்பா வந்திருந்தார். அவர் கையில் ஒரு செய்தித்தாளும், அதன் இணைப்பான ஒரு சிறு புத்தகமும் இருந்தன. செல்வம் ஆவலுடன் அப்புத்தகத்தை வாங்கினான். அதில் வண்ணப் படங்கள் பல இருந்தன; பிரித்துப் படித்தான். கடைசிப் பக்கத்தில் 'சிறுவர்களுக்கான போட்டி' என்று அச்சிடப்பட்டிருந்தது. அதன் கீழே, ஒரு வரைபடம் இருந்தது. அதற்கும் கீழே, 'வரைபடத்தைப் பார்த்துப் பின்வரும் வினாக்களுக்குப் பதில் எழுதுக. அனைத்து வினாக்களுக்கும் சரியான விடை எழுதுபவர்களுக்கு 'ஒரு புத்தகப் பை' அனுப்பி வைக்கப்படும்,' என்று எழுதப்பட்டிருந்தது. வரைபடத்தை உற்றுப் பார்த்தான்.

ஆறுகளின் நீளங்கள் விவரம் :

1. 1280 கி.மீ.
2. 704 கி.மீ.
3. 870 கி.மீ.
4. 1400 கி.மீ.
5. 1290 கி.மீ.
6. 760 கி.மீ.



---

**திறன் :** படித்தல்: எளிய எண் விவர விளக்க, அறிவிப்பு, வரைபடங்கள் முதலியவற்றைப் படித்தறிதல்.

**போட்டிக்கான பகுதி - நிரப்புக.**

1. தென்னிந்திய ஆறுகளுள் மிக நீளமானது ________.
2. வரைபடத்தில் ஓடும் நீளமான ஆறு ________; அதன் நீளம் ________.
3. படத்தில் காட்டப்பட்டுள்ள ஆறுகளுள் நீளம் குறைவானது ________.
4. எண் 3 எனக் குறிக்கப்பட்ட ஆற்றின் பெயர் ________; அதன் நீளம் ________.
5. எண் 5 எனக் குறிக்கப்பட்ட ஆற்றின் பெயர் ________; அதன் நீளம் ________.

'ஆகா! எளிதாக உள்ளதே! நாமும் நிரப்பி அனுப்புவோம்', என்று செல்வம் எண்ணினான். பதிலை எழுதிப் பூர்த்தி செய்தான்; அந்தப் பகுதியை வெட்டி ஓர் உறைக்குள் போட்டு ஒட்டினான்; முகவரியை எழுதினான்; அஞ்சலில் அனுப்ப விரும்பினான்.

மறுநாள் அம்மாவிடம் விவரத்தைக் கூறி, அஞ்சல் செலவுக்கான பணத்தைப் பெற்றுக் கொண்டான்; அஞ்சலகம் சென்றான். அஞ்சல் தலைகளை வாங்கி உறையின்மீது ஒட்டி அஞ்சல் பெட்டியில் சேர்த்தான். அஞ்சல் நிலைய அலுவலருக்கு நன்றி கூறிவிட்டுப் புறப்பட்டான்.

வரும் வழியில் ஒரு விளம்பரத்தைப் பார்த்தான்.

*1901 - 23 கோடி. 1991- 92 கோடி. 2001 - ? கோடி*

*இந்திய மக்கள்தொகை வளர்ச்சி பாரீர்!*

*இன்னும் பெருகினால் என்ன ஆகும்? சிந்திப்பீர்!*

**சிறு குடும்பமே சீரான குடும்பம்.**

இவற்றைச் செல்வம் படித்துப் பார்த்தான். 'அடேயப்பா! நம் நாட்டில் இவ்வளவு மக்கள் தொகையா!' என நினைத்தான். 'நேரம் ஆகி விட்டது. அம்மா... தேடுவாரே' - என நினைத்து விரைந்து நடந்தான். வீதியில் கிடந்த வாழைப் பழத்தோலைக் கவனியாமல் மிதித்து விட்டான்; வழுக்கிக் கீழே விழுந்தான். காலில் அடிபட்டு இரத்தம் வழிந்தது. நொண்டிக்கொண்டே வீட்டை அடைந்தான். அம்மாவிடம் நடந்ததைக் கூறினான். ''என்ன, செல்வம்! பார்த்து நடக்கக் கூடாதா?'' என்று அம்மா அன்புடன் கடிந்து கொண்டார். வீதிகளில் வாழைப்பழத் தோலைப் போடுவதாலும் குப்பைகளைக் கொட்டுவதாலும் ஏற்படும் தீமைகள் குறித்துக் கூறினார். பின்னர் இருவரும் மருத்துவமனைக்குப் புறப்பட்டனர்.

மருத்துவமனை வளாக விளக்க வரைபடம்




அரசுப் பொது மருத்துவமனை வளாகத்திற்குள் நுழைந்தனர். அங்கே பல கட்டடங்கள் இருந்தன. அவற்றின் முன்பகுதியில் எண்கள் குறிக்கப்பட்டிருந்தன. எங்குச் சென்று காயத்திற்கு மருந்து போட்டுக் கொள்வது என்று புரியாமல் தவித்தனர்.

''அம்மா! அதோ பாருங்கள். மருத்துவமனையின் வரைபடமும் அதன் பகுதிகளுக்கான விளக்கங்களும் எழுதிய பெரிய தகவல் பலகை உள்ளது. வாருங்கள்! படித்துத் தெரிந்து கொள்வோம்'', என்று அழைத்தான்.

இருவரும் வரைபடப் பலகையின் அருகில் சென்றனர். செல்வம் அவற்றில் உள்ள அனைத்துத் தகவல்களையும் படித்துக் கூறினான். ''அம்மா! எண் 8 என்ற கட்டடத்தில்தான் புறநோயாளிச் சிகிச்சைப் பிரிவு உள்ளது. எண் 9 என்ற அறையில்தான் கட்டுப் போடும் பகுதி உள்ளது. அங்குதான் நாம் சிகிச்சை பெறச் செல்ல வேண்டும், வாருங்கள் போகலாம்'' என்று செல்வம் அழைத்தான். செல்வத்தின் புத்திக் கூர்மையை அறிந்து தாய் மகிழ்ந்தார். பின்னர் இருவரும் அப்பகுதிக்குச் சென்றனர். மருத்துவரிடம் சிகிச்சை பெற்றுக் கட்டுப் போட்டுக் கொண்டான்.

''செல்வம்! கடை வீதிக்குச் சென்று, காய்கறி வாங்கிக் கொண்டு வீடு திரும்புவோம்'' என்றார் அம்மா. கடை வீதிக்கருகில் பேருந்து நிலையம் இருந்தது. அதில் பேருந்துக் கால அட்டவணை இருந்தது. ''அம்மா அதைப் படித்து விட்டு வரட்டுமா?'', என்று கேட்டான் செல்வம். ''சரி! விரைவில் படித்துவிட்டு வா'', என்றார் அம்மா. அவன் அங்குச் சென்று அட்டவணையைப் படித்துவிட்டுத் திரும்பினான். அம்மா காய்கறிகளை வாங்கிக் கொண்டு வந்தார். இருவரும் விரைந்து வீடு வந்து சேர்ந்தனர்.



### செயல்கள்

* *கிராமக் கூட்டுறவு அங்காடி / கடை போன்ற இடங்களில் எழுதி வைக்கப்பட்டு இருக்கும் அறிவிப்புகளையும் விலைப் பட்டியலையும் படித்து அறிக.*
* *பெரிய நகரங்களில் தெருக்கள் சந்திக்கும் இடங்களில் வைக்கப்பட்டுள்ள வரைபடங்களைப் படித்து அறிக.*

★ பேருந்து, தொடர்வண்டி கால அட்டவணைகளைப் படித்து அறிக / எழுதுக.

★ தொலைக் காட்சியில் காட்டப்பெறும், 'இன்றைய வெப்பநிலை' அட்டவணைகளைப் படித்து அறிக.

★ உன் கிராம / நகர / தெரு வரைபடத்தை வரைந்து அதில் ஆலயம், பள்ளி, சமுதாயக் கூடம், மருத்துவமனை, அஞ்சலகம் போன்ற இடங்களைக் குறிக்க.

## பயிற்சிகள்

### அ) படித்துப் பழகுக:-



'அடேயப்பா! நம் நாட்டில் இவ்வளவு மக்கள் தொகையா?' என நினைத்தான். நேரம் ஆகி விட்டது. அம்மா தேடுவாரே என நினைத்து விரைந்து நடந்தான்.

### ஆ) வரைபடத்தைப் பார்த்துக் கோடிட்ட இடத்தை நிரப்புக:-

மழையின் அளவு




1. இவ்வாரத்தில் அதிக மழை பெய்த நாள் ____________
2. மழை பெய்யாத நாள் ____________
3. குறைவான மழை பெய்த நாள் ____________
4. சனிக்கிழமை பெய்த மழை அளவு ____________ மி.மீ.



### இ) பிரித்து எழுதுக:-

அப்புத்தகம் = ________ + ________

வண்ணப்படம் = ________ + ________

புத்தகப் பை = ________ + ________

வரைபடப் பலகை = ________ + ________

### ஈ) அஞ்சலக விலைப்பட்டியலைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க:-

| வ. எண் | விலைப்பட்டியல் விவரம் | ரூ. காசுகள் |
|---|---|---|
| 1. | அஞ்சல் அட்டை | 0. 50 |
| 2. | போட்டி அஞ்சல் அட்டை | 10. 00 |
| 3. | உள் நாட்டு அஞ்சல் கடிதம் | 2 . 50 |
| 4. | அஞ்சல் உறை | 5, 00 |
| 5. | பணவிடைப் படிவம் | 0. 25 |

1. ஓர் அஞ்சல் அட்டையின் விலை என்ன?
2. ஆறு ரூபாய்க்கு எத்தனை அஞ்சல் அட்டைகள் வாங்கலாம்?
3. பத்து உள்நாட்டு அஞ்சல் கடிதம் வாங்க எவ்வளவு ரூபாய் தேவை?
4. ஓர் அஞ்சல் உறையின் விலை எவ்வளவு?



### உ) வினாக்களுக்கு விடையளிக்க :-

1. செல்வம் அஞ்சல் அலுவலகத்துக்கு ஏன் சென்றான்?
2. தென்னிந்தியாவில் பாயும் ஆறுகளை எழுதுக.
3. செல்வம் படித்த 'மக்கள்தொகை வளர்ச்சி' விளம்பரத்தை எழுதுக.
4. வரைபடத்தில் உள்ள மருத்துவமனைக்கு நீ சென்றால் எங்கு சீட்டு வாங்குவாய்? எங்கு கட்டு போட்டுக் கொள்ள வேண்டும்?

# இலக்கணம்

## திணை

சொல்லின் வகைகளை அறிந்து கொண்டீர்கள். இப்பொழுது 'திணை' பற்றியும் அவற்றின் வகைகளையும் அறிந்து கொள்ளுங்கள்.

'திணை' என்பதற்கு ஒழுக்கம் என்பது பொருள். உலகில் கோடிக்கணக்கான உயிர்கள் வாழ்கின்றன. அவற்றுள் மனித இனம் மட்டுமே பிற உயிர்களிடம் இல்லாத உயர்ந்த பண்புகளைப் பெற்ற இனம். எனவேதான், மனிதர், தேவர், நரகர் ஆகியோரை 'உயர்திணை' என்றும், மற்ற உயிர் உள்ளவை உயிர் இல்லாதவை அனைத்தும் 'அஃறிணை' (அல் + திணை) என்றும் கூறுகிறோம்.

(எ-டு) முருகன், திருமகள், குமணன், வேணி - **உயர்திணை**

மாடு, மரம், கல், பறவை - **அஃறிணை**

## வினாக்கள் :-

1. திணை எத்தனை வகைப்படும்? அவை யாவை?
2. பின்வரும் சொற்களிலிருந்து உயர்திணை, அஃறிணைச் சொற்களை எடுத்து எழுதுக.

   காகிதம், மாதவன், கப்பல், இயந்திரம், குமார், கண்ணகி, துர்காதேவி, மரங்கொத்தி
3. உம் பாடப் பகுதியில் இருந்து உயர்திணை, அஃறிணைச் சொற்களை எடுத்து எழுதுக.

| உயர்திணை | அஃறிணை |
|---|---|
| | |



# 11 விடியலை நோக்கி...!

9, காந்தி நகர்,
சென்னை - 600 019.
12-08-1998

அன்புத் தங்கைக்கு,

விடுதலைப் பொன்விழா வாழ்த்துகள். இங்கு நான், பெரியப்பா, பெரியம்மா அனைவரும் நலம். அங்கு உன் நலமும் பெற்றோர் நலமும் அறிய விழைகிறேன்.

இக்கடிதத்தில் சுதந்திரதினப் பொன்விழா கொண்டாடப்பட்ட செய்தியை எழுத விரும்புகிறேன். ஆகஸ்டு பதினைந்தாம் நாள் 'சுதந்திர தினம்' என்பதை நீ அறிவாய். அதிலும் சிறப்பாக 1997 ஆம் ஆண்டு சுதந்திரதினம் மறக்க முடியாத நாளாகும். ஏனென்றால் இந்நாள் இந்திய விடுதலைப் பொன்விழாவின் தொடக்க நாளாகும்.

இவ்வாண்டு விடுதலைப் பொன்விழாவின் நிறைவுவிழா இந்தியாவெங்கும் கொண்டாடப்பட்டது. தமிழகத்திலும், சென்னை மெரினாக் கடற்கரையில் இம்மாதம் 11ஆம் நாள் மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவிற்குத் தமிழக முதல்வர் தலைமை தாங்கினார்.



அந்தமான் தீவிலுள்ள 'காலாபாணி' சிறையைப் பற்றி நீ அறிவாயா? அச்சிறையின் மாதிரி வடிவம் அமைக்கப்பட்டு, அதன் முன்பு மேடை அமைக்கப்பட்டிருந்தது. இதுவே இவ்விழாவின் சிறப்பு அம்சமாகும்.

---

**திறன் :** கையெழுத்துப் பிரதிகளைச் சுலபமாகப் படித்தறிதல்.

இதற்கான காரணத்தை நீ அறிவாயா? நம் நாட்டை ஆங்கிலேயர் சுமார் இருநூறு ஆண்டுகள் ஆண்டனர். அவர்கள் நம் நாட்டு மக்களை அடிமைகளாக நடத்தினர்; விடுதலைக்குப் போராடியவர்களை ஈவு இரக்கமின்றிச் சித்திரவதை செய்தனர்; அந்தமான் தீவிற்கு நாடு கடத்தினர்; அங்கு அவர்களைக் கொண்டே 1896 ஆம் ஆண்டு காலாபாணிச் சிறையைக் கட்டி முடித்தனர்.

அச்சிறையில் அறைகள் மிகச் சிறியனவாக இருந்தன. ஓர் அறையில் ஒருவர் மட்டுமே தங்க முடியும். சிறையில் அடைக்கப்பட்டவர்கள் பிறரைப் பார்க்கவோ பேசவோ இயலாது. போராட்ட வீரர்களுக்கு இத்தனிமைச் சிறை பெரும் துயரினை அளித்தது. விடுதலைக்குக் குரல் எழுப்பியவர்களை நகர முடியாமல் கட்டி வைத்து அடித்தனர். சிறையிலிருந்த அனைவரும் காணும் வகையில் நூற்றுக் கணக்கானவர்களைத் தூக்கில் இட்டனர். இந்நிலையைக் கண்டு நம் விடுதலை வீரர்கள் மனம் வெதும்பினர்; நம் நாட்டின் **'விடுதலை என்னும் விடியலை'** நோக்கிக் காத்திருந்தனர்.

இந்த விடியலுக்காக ஆயிரக்கணக்கானோர் செந்நீர் சிந்தினர்; கொடுஞ்சிறை சென்றனர்; இன்னுயிர் ஈந்தனர்; தியாகம் பல புரிந்தனர். அதனால்தான் நம்நாடு விடுதலை அடைந்தது. இதை நினைவுகூரத்தக்க வகையில் மேடையின் பின்னணி வடிவமைக்கப் பட்டிருந்தது. அது 'காலாபாணி'ச் சிறையைக் கண்ணெதிரே கொண்டு வந்து, காண்போர் கண்களைக் கலங்க வைத்தது. இவ்வாறு அரும்பாடுபட்டுப் பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காப்பது நமது கடமையன்றோ!

மேலும் விழாவின் மற்றொரு சிறப்பையும் உனக்குக் கூற விரும்புகிறேன். விழாவில் பல்வேறு மாநிலப் பண்பாட்டு நடனங்கள் பள்ளி மாணவர்களால் ஆடிக் காட்டப்பட்டன. அவை தேசிய ஒருமைப்பாட்டு உணர்வை வெளிப்படுத்தின.

உன் பள்ளியில் விடுதலைப் பொன்விழா ஆண்டின் நிறைவு விழா எவ்வாறு கொண்டாடப்பட்டது என்பதைக் கடிதம் மூலம் எனக்கு எழுது.

வந்தே மாதரம்!

அன்பு அண்ணன்,

**த. குமரன்**

பெறுநர் :

செல்வி த. வெண்ணிலா,

63, அண்ணா வீதி,

சிந்தாமணி (அஞ்சல்),

விழுப்புரம் மாவட்டம் - 605 601

பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனி சிறந்தனவே!
- பாரதியார்

## செயல்கள்



★ 'விடியலை நோக்கி' என்னும் கடிதத்திற்குப் பதில் கடிதம் ஒன்று எழுதுக / படிக்க.

★ உன் தெருவில் மின் விளக்குகள் எரியவில்லை; பழுது பார்க்குமாறு ஊராட்சி மன்றத் தலைவருக்கு ஒரு விண்ணப்பம் தயார் செய்க / படிக்க.

★ நாட்டுக்கு உழைத்த தலைவர்களில் உன்னை மிகவும் கவர்ந்த தலைவர் பற்றிச் சிறு கட்டுரை எழுதுக.

★ பிற மாணவர்களின் குறிப்பேடுகளைப் படிக்க.

★ உன் பிறந்த நாள் விழாவிற்கு நண்பனை அழைத்துக் கடிதம் ஒன்று வரைக.

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

இந்த விடியலுக்காக ஆயிரக் கணக்கானோர் செந்நீர் சிந்தினர்; கொடுஞ்சிறை சென்றனர்; இன்னுயிர் ஈந்தனர்; தியாகம் பல புரிந்தனர்.

### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-



| | |
|---|---|
| பொன்விழா ________ | வெதும்பினர் ________ |
| விழைகிறேன் ________ | பேணி ________ |
| சித்திரவதை ________ | துயர் ________ |
| செந்நீர் ________ | வந்தே மாதரம் ________ |

### இ) பிரித்து எழுதுக:-



இந்நாள் = ________ + ________

இன்னுயிர் = ________ + ________

கொடுஞ்சிறை = ________ + ________

அரும்பாடு = ________ + ________

### ஈ) சேர்த்து எழுதுக:-

கடல் + கரை = ________

இரக்கம் + இன்றி = ________

தூக்கில் + இட்டனர் = ________

கண் + எதிரே = ________

### உ) கோடிட்ட இடங்களைத் தகுந்த சொற்களால் நிறைவு செய்க / படிக்க:-



1. விடுதலைக்குப் போராடியவர்களை ________ தீவிற்கு நாடு கடத்தினர்.
2. இந்த விடியலுக்காக ________ செந்நீர் சிந்தினர்

3. சென்னை ______________ கடற்கரையில் பொன் விழாவின் நிறைவு விழா நடைபெற்றது.

4. அரும்பாடுபட்டுப் பெற்ற சுதந்திரத்தை ______________, ______________ நமது கடமை.

**ண) பின்வரும் கடிதத்தில் முகவரியின் வரிசை மாறியுள்ளது. சரியாக அமைத்து எழுதுக / படிக்க.**

| | |
|---|---|
| புதுக்கோட்டை மாவட்டம்,<br>க.கலைச்செல்வி,<br>குறியீட்டு எண்: 622303,<br>57-அ/1,கொத்தக் கோட்டை<br>(அஞ்சல்), | ______________<br>______________<br>______________<br>______________ |

**எ) பொருத்தமான சொற்களைத் தேர்ந்தெடுத்து உன் வகுப்பு ஆசிரியருக்கு விடுமுறை விண்ணப்பம் எழுதுக.**

அனுப்புநர் :

______________
______________
______________

பெறுநர் :

வகுப்பாசிரியர் அவர்கள்,
______________
______________

ஐயா,

எனக்குக் ______________ இருப்பதால் ______________ வர இயலவில்லை. எனவே இன்று ஒரு நாள் ______________ விடுப்பு ______________ வேண்டுகிறேன்.

இடம் : ______________ தங்கள் கீழ்ப்படிதலுள்ள,
நாள் : ______________ ______________

**(வழங்கும்படி, பள்ளிக்கு, மட்டும், காய்ச்சலாக)**

## ஏ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. தமிழகத்தில் விடுதலைப் பொன்விழா ஆண்டு நிறைவு விழா எங்கு, எப்போது கொண்டாடப் பட்டது?
2. அந்தமான் சிறை எப்போது யாரால் கட்டப்பட்டது? அதன் பெயர் என்ன?
3. நம் முன்னோர் நம் நாட்டிற்கு எவ்வாறு விடுதலை பெற்றுத் தந்தனர்?
4. தமிழக அரசு விடுதலைப் பொன்விழா ஆண்டு நிறைவு விழாவை அந்தமான் சிறை அமைப்பில் வடிவமைத்துக் கொண்டாடியது ஏன்?

## ஐ) குறிப்புகளைப் பயன்படுத்திக் கட்டத்தை நிறைவு செய்க:-

1. தமிழ் எழுத்துகளில் முதல் எழுத்து.
2. கையைக் கொண்ட ஆறு
3. முத்தமிழில் முதல் தமிழ்
4. தமிழர் திருநாள்
5. பள்ளியில் பாடம் கற்பிப்பவர்
6. முதல் தமிழ் மாதம்
7. உன்னைப் பெற்றவள்
8. தமிழ் மூதாட்டி
9. தமிழ் மொழியின் சிறப்பெழுத்து



## இலக்கணம்

### பால்

திணை வகைகளை அறிந்து கொண்டீர்கள். மக்கள் உயர்திணை என்பதைப் புரிந்துகொண்டீர்கள்.

மக்களுள் ஆண், பெண் என்ற இரு பிரிவுகள் உள்ளன. இவற்றுள் ஆணைக் குறித்து வரும் சொல் **ஆண்பால்** எனப்படும்.

**(எ-டு)** எழிலன், தணிகைவேலன்

பெண்ணைக் குறித்து வரும் சொல் **பெண்பால்** எனப்படும். **(எ-டு)** இளவரசி, வள்ளி

ஆண், பெண் இருபாலரிலும் பலரைக் குறித்து வருவது அல்லது இருபாலரையும் சேர்த்துப் பலரைக் குறிப்பது **பலர்பால்** எனப்படும். **(எ-டு)** ஆண்கள், பெண்கள், குழந்தைகள், மக்கள்

அஃறிணைப் பொருள்களை ஆண், பெண் எனப் பாகுபாடு செய்வதில்லை. அஃறிணையில் ஒன்றை மட்டும் குறிப்பது **ஒன்றன்பால்** எனப்படும். (எ-டு) பறவை.

ஒன்றுக்கு மேற்பட்டவற்றைக் குறிப்பது **பலவின்பால்** எனப்படும். (எ-டு) பறவைகள்.

எனவே ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன் பால், பலவின் பால் எனப் பால் ஐந்து வகைப்படும். பால் என்பது 'பிரிவு' அல்லது 'பகுப்பு' எனப் பொருள்படும்.

**வினாக்கள்:-**

1. பால் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
2. கீழேயுள்ள சொற்களை அவற்றிற்குரிய பால் வகைகளில் எழுதுக.

குமரன், மணிமேகலை, காகம், நாவரசன், மாதவி, மக்கள், மரங்கள், பெண்கள், செடிகள், வீரர்கள், தங்கை, மாணவர்கள் வெண்ணிலா, யானை.

| ஆண் பால் | பெண் பால் | பலர் பால் | ஒன்றன் பால் | பலவின் பால் |
|---|---|---|---|---|
| | | | | |

# 12 செய்திச் சோலை



## நெஞ்சத்தை நெகிழ வைத்த மாணவி இராஜலட்சுமியின் நிறைவேறிய ஆசையும், நிறைவேறாத ஆசையும்!

*திருவண்ணாமலை,*
*1998 அக்.10*

திருவண்ணாமலையில் கூலித்தொழில் செய்பவர் திரு. சுப்பிரமணி. இவருடைய மகள் இராஜலட்சுமி. நகராட்சி மேல் நிலைப் பள்ளியில் பதினோராம் வகுப்புப் படித்து வந்தார்.

இராஜலட்சுமி தன்னுடைய தந்தைக்குச் சாப்பாடு எடுத்துக் கொண்டு மிதிவண்டியில் சென்றார். அப்போது அவருக்குப் பின்னால் வந்த செங்கல் ஏற்றிய லாரி ஒன்று இராஜலட்சுமியின் மிதிவண்டி மீது மோதியது. இதனால் இராஜலட்சுமியின் இரண்டு கால்களும் நசுங்கின. இரத்தம் கொட்டியது. உயிருக்குப் போராடிய இராஜலட்சுமியை அருகிலிருந்தவர்கள் அரசு மருத்துவமனையில் சேர்த்தனர்.

தகவலறிந்த பெற்றோர் கண்ணீரும் கம்பலையுமாக வந்தனர். அவர்களிடம், ''நான் இறந்து விடுவேன். எனது கண்களைப் பார்வையற்ற மாமன் மகளுக்குப் பொருத்துங்கள்,'' என்று கூறினார்; ''நீங்கள் சண்டை போடாது ஒற்றுமையாய் இருங்கள்,'' என்றும் வேண்டினார்.

மேலும், சிகிச்சை செய்த மருத்துவரிடம் தனது படிப்புக்கு உதவிய மாவட்ட ஆட்சியர் அவர்களைக் கடைசியாகப் பார்க்க வேண்டும் என்று கூறினார்.

தகவல் அறிந்த ஆட்சியர் மருத்துவமனைக்கு விரைந்தார். ஆனால், அதற்குள் மாணவி இராஜலட்சுமியின் உயிர் பிரிந்து விட்டது.

மாணவியின் உடலைப் பார்த்த ஆட்சியர் கண் கலங்கினார்.

இராஜலட்சுமியின் விருப்பப்படி மருத்துவர் அவரது கண்களை எடுத்தனர். அவருடைய மாமன் மகளுக்குப்

---

***இறன் :*** *செய்தித்தாள்களையும், பிற அச்சிட்ட செய்திகளையும் படித்தல்.*

பொருத்த ஏற்பாடு செய்தனர். மனித நேயமிக்க இந்த மாணவியின் தியாகத்தை எண்ணி ஊர்மக்கள் மனம் நெகிழ்ந்தனர்.

**தானங்களில் சிறந்தது கண்தானம்**

## நேர்மை

*ஐதராபாத், 1998 அக்.16*

பல இலட்சம் மதிப்புள்ள நகைகளை உரியவரிடம் ஒப்படைத்த நேர்மையான செயல் அண்மையில் ஐதராபாத்தில் நடந்துள்ளது.

ஆட்டோ ஓட்டும் தொழில் செய்பவர் ஷேக் மஹபூப் அலி. பயணி ஒருவர் தம்முடைய ஆட்டோவில் தவறுதலாக விட்டுச் சென்ற பையைத் திறந்து பார்த்தார். அதில் பல இலட்சம் மதிப்புள்ள வைர, தங்க நகைகள் இருந்தன.

மஹபூப் அலி அதைக் காவல் நிலையத்தில் ஒப்படைத்தார். பைக்கு உரியவர் முன்பே காவல் நிலையத்தில் புகார் கொடுத்திருந்தார்.

எனவே, நகைப்பை உரியவரிடம் பத்திரமாக ஒப்படைக்கப்பட்டது. நகைக்கு உரியவர் மனம் நெகிழ்ந்து அதே இடத்தில் ரூபாய் பத்தாயிரத்தை அலிக்குப் பரிசாக அளித்தார்.

இச்செய்தி அறிந்த நகரச் சுழற்சங்கம் ஏழையான மஹபூப் அலிக்கு ஒரு ஆட்டோவை வாங்கிப் பரிசாக அளித்தது. அலியின் நேர்மைப் பண்பை நாமும் பாராட்டலாமே!

* * *

*நீங்கள் எதைச் செய்தாலும் சரி, உலகத்திற்கும் உள்ளத்திற்கும் உண்மையாகவே நடந்து கொள்ளுங்கள்.*

*- உத்தமர் காந்தி*

## சிறுமிகளின் தீரச் செயல்

*வேலூர், 98 ஜூலை. 27*

ஆம்பூர் அருகேயுள்ள வெங்கட சமுத்திரம் கிராமத்தைச் சேர்ந்தது அத்திமாகுலப்பள்ளிக் குடியிருப்பு. இவ்வூருக்குக் கரும்பூரிலிருந்து குறுக்கு வழியில் செல்லலாம். வழியில் காட்டாற்று ஓடை ஒன்றுள்ளது.

அத்திமாகுலப் பள்ளியைச் சேர்ந்த கவிதா, சுகுணா என்ற இரு மாணவியர் பள்ளிக்குச் சென்றனர். அவர்கள் ஓடையைக் கடக்கும் போது திடீரென்று காட்டாற்று வெள்ளம் வந்தது. வெள்ளத்தில் ஆனந்தன், மணி என்ற இரு சிறுவர்கள் சிக்கிக் கொண்டனர். அதுகண்ட கவிதாவும், சுகுணாவும் வெள்ளத்தில் நீந்தி அச்சிறுவர்களைக் காப்பாற்றினர்.

இவ்விரு சிறுமிகளின் தீரச் செயலை மாவட்ட ஆட்சியாளர் பாராட்டினார். மேலும், வீர தீரச் செயலுக்கான 'அண்ணா விருதை'ப் பெற அரசுக்குப் பரிந்துரை செய்துள்ளார்.

> 'நாம் சம்பாதிக்கப் பிறந்தவர்கள் அல்லர்; சாதனை செய்யப் பிறந்தவர்கள்', என்ற எண்ணம் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டாக வேண்டும்.
>
> -விவேகானந்தர்

## செய்திக் குறிப்பு

### நல்லூர் பள்ளியில் ஆண்டு விழா

நல்லூர் தொடக்கப்பள்ளியில் ஆண்டு விழா சிறப்பாக நடைபெற்றது. மாவட்ட ஆட்சியர் விழாவுக்குத் தலைமை தாங்கினார்.

அன்று காலை பள்ளித் திடலில் தேசியக் கொடி ஏற்றப்பட்டது. ஊராட்சி மன்றத் தலைவர் கொடி ஏற்றினார். ஆசிரியர்களும், மாணவர்களும், பெற்றோர்களும் கொடிக்கு வணக்கம் செலுத்தினர்.

பலவகைப் போட்டிகளிலும் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு

அன்று மாலை நடந்த விழாவில் மாவட்ட ஆட்சியர் பரிசுகள் வழங்கினார். அப்போது அவர்,

'ஆண்டவன் முன் அனைவரும் சமம்', என்பது இராமானுசர் கொள்கை;

'தீண்டாமையை ஒழிக்க வேண்டும்' என்பது தேசத் தந்தை அண்ணல் காந்தியடிகளின் ஆவல்;

'சாதி, மத வேறுபாட்டை அறவே நீக்க வேண்டும்'; என்பது தந்தை பெரியாரின் சிந்தனை;

'ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண வேண்டும்' என்பது பேரறிஞர் அண்ணாவின் விருப்பம்.

சாதி, சமய வேறுபாடின்றி, 'அனைவரும் சமம் என்ற' எண்ணம் மேலோங்கி, ஒற்றுமையாக வாழ வேண்டும் என்று அறிவுரை கூறினார்.

தலைமையாசிரியர் நன்றி கூறினார். மாணவ மாணவியரின் மாறு வேட நிகழ்ச்சி சிறப்பாக அமைந்தது. நிறைவாக நாட்டுப் பண் இசைக்கப்பட்டது.

## பயனுள்ள செய்திகளைப் பகுத்தறிந்து படி...

'செய்திச் சோலை' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ள செய்திகளைப் படித்திருப்பீர்கள். குழந்தைப் பருவத்திலேயே நற்பண்புகளால் தங்களை அடையாளம் காட்டிய சிறுவர் சிறுமியரின் நற்செயல்கள் உங்கள் உள்ளங்களைக் கவர்ந்திருக்கும்.

செய்தித் தாள்களில் கொடுக்கப் படும் செய்திகளில், 'இவ்வாறு நாமும் செய்யலாமே' என்று தூண்டக்கூடிய நற்பண்புகளை வெளிக்காட்டும் செய்திகளைப் பகுத்தறிந்து படித்து நாட்டிற்கு நன்மை செய்பவர்களாகத் திகழுங்கள்.

● ✪ ●

மனிதனுக்கு மனிதன் சமம். ஒருவனை, ஒருவன் சுரண்டக்கூடாது; ஒருவனுக்கு ஒருவன் உதவி செய்ய வேண்டும்; ஒருவனை ஒருவன் வருத்தக் கூடாது; கூடுமான வரை வாழ்க்கையில் ஒருவருக்கொருவர் குறைபாடும் கவலையும் இல்லாமல் தன்னைப் போல் பிறரும் என்ற நேச உணர்ச்சியோடு வாழ வேண்டும்.

-தந்தை பெரியார்



## செயல்கள்

★ செய்தித் தாள்களிலும், சிறுவர்களுக்கான வெளியீடுகளிலும் வரும் செய்திகளைப் படிக்க.

★ வண்ணச் சுவரொட்டிகள், துண்டு அறிக்கைகள் போன்றவற்றைப் பொருள் புரிந்து படிக்க.

★ அச்சு வெளியீடுகளில் வரும் புதிர்கள், விடுகதைகள் ஆகியவற்றைப் படித்து விடை கூறுக.

★ ஆண்டுவிழா மற்றும் திருமண அழைப்பிதழ்களைப் படித்தறிக.

## பயிற்சிகள்



### அ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

| | | | |
|---|---|---|---|
| நேயம் | ________ | தானம் | ________ |
| பத்திரமாக | ________ | ஒப்படை | ________ |
| ஓடை | ________ | தீரச் செயல் | ________ |
| நேர்மை | ________ | சமத்துவம் | ________ |



### ஆ) பிரித்து எழுதுக:-

பத்தாயிரம் = ________ + ________

தகவலறிந்த = ________ + ________

அருகிலிருந்த = ________ + ________

பார்வையற்ற = ________ + ________

### இ) சேர்த்து எழுதுக:-

காடு + ஆறு = ________

பார்வை + அற்ற = ________

திடீர் + என்று = ________

வேற்றுமை + இன்றி = ________

## ஈ) கோடிட்ட இடத்தில் பொருத்தமான எதிர்ச் சொற்களை எழுதிப் படிக்க:-



1. **பின்னால்** சென்ற பேருந்து __________ போன சரக்கு உந்தின்மீது மோதி நால்வர் காயம்.
2. மிகுந்த **தொலைவில்** நடக்கும் அறிவியல் அற்புதங்களை __________ உள்ள தொலைக்காட்சியில் பார்த்து மகிழலாம்.
3. இந்திய மக்கள் **வேற்றுமை**யின்றி __________ வாழ வேண்டும்.

## உ) கொடுக்கப்பட்டுள்ள செய்தியைப் படித்துக் கோடிட்ட இடங்களை நிரப்புக:-

தமிழ்ப் பெண்களின் தவ விளக்காக ஒளிர்ந்தவர் டாக்டர் முத்துலெட்சுமி அம்மையார். கல்வி பயிலும் காலத்திலேயே மகாகவி பாரதி, சரோஜினி நாயுடு, அன்னிபெசண்ட் ஆகியோரின் நட்பு இவருக்குக் கிட்டியது. இவரது உள்ளத்தில் விடுதலைச் சிந்தனை மட்டுமல்லாமல் பெண் முன்னேற்றச் சிந்தனையும் தோன்றியது.

வாழ்வில் திக்கற்றவர்களாய் நின்ற பெண்களுக்கும், ஆதரவற்றவர்களாய் நின்ற குழந்தைகளுக்கும் அவரது இல்லத்திலேயே 'ஔவை இல்லம்' தொடங்கினார். இவர், முதல் இந்தியப் பெண் மருத்துவராகவும், சட்ட மேலவை உறுப்பினராகவும், சட்டப் பேரவைத் துணைத் தலைவராகவும் திகழ்ந்தார்.

1. தமிழ்ப் பெண்மணிகளின் தவ விளக்காக ஒளிர்ந்தவர் __________ ஆவார்.
2. முத்துலெட்சுமி அம்மையார் __________, __________, __________ ஆகியோரிடம் நட்புக் கொண்டிருந்தார்.
3. முத்துலெட்சுமி அம்மையார் __________ இல்லம் தொடங்கினார்.
4. முத்துலெட்சுமி அம்மையார் முதல் இந்தியப் __________, __________ சட்ட மேலவை உறுப்பினராகவும், சட்டப் பேரவைத் __________ திகழ்ந்தார்.

### ஊ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. மாணவி இராஜலட்சுமியின் மூன்று ஆசைகள் யாவை?
2. ஆட்டோ ஓட்டுநரின் நேர்மையை விளக்கும் செய்தியைக் கூறுக.
3. ஆம்பூர்ச் சிறுமிகளின் தீரச் செயலை விவரி.
4. இராமானுசரின் கொள்கை யாது?
5. பெரியாரின் அறிவுரை யாது?

## இலக்கணம்

### எண் பெயர்

பொருள்களின் எண்ணிக்கையைக் குறிப்பது 'எண்' எனப்படும். எண் இரண்டு வகைப்படும். ஒரு பொருளைக் குறிப்பது ஒருமை. ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் குறிப்பது பன்மை.

**(எ-டு)** மரம் - ஒருமை     மரங்கள் - பன்மை

### இடப்பெயர்

இடப்பெயர்கள் மூன்று வகைப்படும். அவை தன்மை, முன்னிலை, படர்க்கை எனப்படும்.

தன்னைக் குறிக்க வருவது தன்மை.

**(எ-டு)** நான், யான், யாம், நாங்கள்

தனக்கு முன் உள்ளவரைக் குறிப்பது முன்னிலை.

**(எ-டு)** நீ, நீர், நீவிர், நீங்கள்

அயலாரை / தூரத்தில் உள்ளவரைக் குறிப்பது படர்க்கை.

**(எ-டு)** அவன், அவள், அவர்கள், அது, அவை

### வினாக்கள்:-

1. நீ அறிந்த ஒருமை, பன்மைப் பெயர்களை எழுதுக.
2. பாடப் பகுதியில் உள்ள மூவிடப் பெயர்களை எடுத்தெழுதுக.

# 13 கோணங்கி சோணங்கி



ஓர் அடர்ந்த காடு. அந்தக் காட்டில் சிங்கம் ஒன்று தலைதெறிக்க ஓடிவந்தது. அதனை மரத்தின் மேலிருந்த கோணங்கி, சோணங்கி என்ற குரங்குகள் கண்டன. ''என்ன! நம் அரசர் அரக்கப்பரக்க ஓடி வருகிறாரே! வா! நாம் போய்க் கேட்போம்,'' என்றது கோணங்கி.

உடனே, கோணங்கியும் சோணங்கியும் மரத்திலிருந்து 'தொப்''தொப்' என்று குதித்தன. அதைக்கேட்டு, மீண்டும் சிங்கம் மருண்டு ஓடியது. ''அரசே! அரசே! நாங்கள்தான், உம் நண்பர்கள்; ஓடாதீர்கள்! ஓடாதீர்கள்!'' என்று குரங்குகள் கூறின.

சிங்கம் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க, ''நண்பர்களே! காட்டாற்றின் பக்கம் ஏதோ பயங்கரமான சத்தத்தைக் கேட்டேன். அதனால்தான் ஓடி வந்தேன்; அக்குரலுக்கு உரியவன் என்னைவிட வலிமை மிக்கவனாகத்தான் இருக்க வேண்டும். உடனே புறப்படுங்கள்; நாம் வேறு காட்டுக்குச் சென்று விடலாம்,'' என்றது.



''அரசே! குரலொலியை வைத்து ஒருவரின் வலிமையை அளவிட முடியாது. 'வாய்ச்சொல் வீரர்கள் வாள் வீச மாட்டார்கள்'. நீங்கள் இங்கேயே இருங்கள். நாங்கள் போய் அது என்ன என்பதை அறிந்து வருகின்றோம்,'' என்று கோணங்கி கூறியது.

---

***திறன் : எழுதுதல் : சரியான வடிவமைப்புடன் இடம்விட்டு எழுதுதல்; எல்லா ஒலி நிறுத்தக் குறியீடுகளையும் சொல்லக் கேட்டு எழுதுதல்.***

கோணங்கியும் சோணங்கியும் மரக்கிளைகளை ஒடித்துக் கையில் ஏந்திக் கொண்டு காட்டாற்றின் பக்கம் சென்றன. அங்கே அச்சம் தரும் ஒலியைக் கேட்டன. கோணங்கியும் சோணங்கியும் அஞ்சி நடுங்கின. மரக்கிளைகளை வீசிவிட்டு அருகிலிருந்த ஒரு மரத்தின் மீது ஏறி உச்சிக்குச் சென்றன. அங்கிருந்து அவை சுற்று முற்றும் திகைப்போடு பார்த்தன.

உடனே சோணங்கி, ''அங்கே பார். கொழுத்த குதிரை ஒன்று காட்டாற்றின் கரையில் துள்ளிக் குதிக்கிறது. ஓகோ! இந்தப் புதுமையான குரலொலி இதனுடையது தானா! இதற்கா நாம் அஞ்சி நடுங்கினோம்! இறங்கி வா; நாம் போய் அதை விசாரிப்போம்'', என்றது.

குரங்குகள் இரண்டும் குதிரையின் பக்கம் சென்றன. ''குதிரையாரே! குதிரையாரே! வணக்கம். நீர் யார்? எங்கிருந்து வந்தீர்? இந்தக் காட்டிற்கு வீரசிம்மர் என்ற ஓர் அரசர் உள்ளார். அவர் உம்மைக் கண்டால் கொன்று தின்றுவிடுவார். நாங்கள் இருவரும் அவருக்கு உயிர்த் தோழர்கள். நாங்கள் அவரிடம் பேசி உம்மைக் காப்பாற்றுகின்றோம்,'' என்று நயமாகப் பேசின.

''நண்பர்களே! நான் ஒரு குதிரை வண்டிக்காரனுக்குச் சொந்தமானவன். அவன் தினமும் என்னை அதிகம் வேலை வாங்குவான். ஆனால், குறைந்த அளவு காய்ந்த புல்லை மட்டுமே உணவாகத் தருவான். அதனால் என் உடல் மெலிந்துவிட்டது. என்னால் வண்டி இழுக்க இயலவில்லை. ஆகவே, அவனிடமிருந்து தப்பிப் பிழைத்து இக்காட்டிற்குள் ஓடி வந்து விட்டேன்,'' என்று கூறியது குதிரை.

அதைக் கேட்ட சோணங்கி, ''அப்படியா! இனி கவலைப் பட வேண்டாம். நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். ஆனால், நீர் இப்பொழுதே எங்களுடன் வரவேண்டும். நாங்கள் அரசரிடம் பேசி உமக்கு இக்காட்டில் வாழ அனுமதி பெற்றுத் தருகின்றோம்'', என்றது.

குதிரை ''சரி'' என்றது. குரங்குகள் முன்னே செல்லக் குதிரை பின்னே சென்றது. மூன்றும் சிங்கம் இருக்கும் இடத்தை நெருங்கின. அப்பொழுது எதிர்பாராமல் மரத்திலிருந்து பழுத்த பழம் ஒன்று குதிரையின் மேல் விழுந்தது. அதனால் குதிரை மருண்டு துள்ளிக் குதித்துக் கனைத்தது. குதிரையின் கனைப்பொலியைக் கேட்ட சிங்கம் மீண்டும் பயந்து ஓடி ஒளிந்தது. குரங்குகளுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை.



உடனே, கோணங்கி குதிரையைப் பார்த்து, ''எங்கள் அரசர் புதியவர் யாராவது தம்மைக் காண வந்தால் முதலில் கூச்சப்பட்டு ஓடி ஒளிந்து கொள்வார்; சிறிது நேரத்தில் கூச்சம் நீங்கி வந்து விடுவார். ஆதலால் நீர் இங்கேயே இரும். நான் போய் அரசரை அழைத்து வருகிறேன்,'' என்றது. அவ்விதமே கோணங்கி ஓடிச்சென்று சிங்கத்தின் காதில் ஏதோ கிசுகிசுத்தது. பின்பு சிங்கம் அங்கே இருந்த பாறையின் மேல் வந்து அமர்ந்தது.

உடனே கோணங்கி, ''அரசே! இவர் நம் விருந்தினர்; மிகவும் நல்லவர். இவர் உங்களிடம் ஏதோ பேச வேண்டும் என்று விழைகின்றார். அதனால், இவரை உம்மிடம் அழைத்து வந்துள்ளோம்,'' என்றது.

சிங்கம் துணிச்சலுடன் தன் கம்பீரமான குரலில், ''நீ என்னிடம் என்ன பேச விழைகின்றாய்? விரைந்து கூறு,'' என்று குதிரைக்கு ஆணையிட்டது.

குதிரை பணிவுடன் குனிந்து, ''அரசே! கருணைமிக்க காவலரே! வணக்கம்'', என்று தொடங்கித் தன் சோகக் கதையைக் கூறி முடித்தது. பின்பு, ''ஐயா! நான் தங்கள் ஆதரவை நாடி வந்துள்ளேன். தாங்கள்தான் எனக்கு அடைக்கலம் தர வேண்டும்,'' என்று கெஞ்சியது. அந்தச் சமயத்தில் கோணங்கி சிங்கத்தின் காதில் ஏதோ மெல்லக் கூறியது.

உடனே சிங்கம், ''பயப்படாதே! நான் உனக்குப் பாதுகாப்பு அளிக்கிறேன். இன்றுமுதல் நீ இக்காட்டில் எங்கு வேண்டுமானாலும் புல் மேய்ந்து கொள்ளலாம். காட்டாற்றில் நீர் அருந்திக்கொள்ளலாம். ஆனால், வாரம் ஒருமுறை வந்து என்னைப் பணிந்து செல்ல வேண்டும்,'' என்று கட்டளையிட்டது.

அதைக் கேட்ட குதிரை தலையை ஆட்டித் தன் குரலை மென்மையாக்கி, ''நன்றி அரசே!'' என்றது. அதன் குரலின் இனிமையைக் கேட்டுச் சிங்கம் தான் கொண்ட அச்சத்திலிருந்து விடுபட்டது. தன் அச்சத்தை நீக்கிய கோணங்கிக்கும் சோணங்கிக்கும் நன்றி கூறிப் பாராட்டியது. குதிரையும் தனக்கு உதவிய குரங்குகளுக்கு நன்றியைத் தெரிவித்துவிட்டு மகிழ்வோடு காட்டிற்குள் சென்றது.

குதிரை புறப்பட்டுச் சென்றதும் கோணங்கி வருத்தத்துடன் சிங்கத்தைப் பார்த்து, ''அரசே! உமக்கு அச்சம் விளைவித்த குதிரையைக் கொன்றுவிடுங்கள் என்றுதானே தங்கள் காதில் சொன்னேன். நீங்கள் அவ்வாறு செய்யாமல் அதற்குப் புல் மேயவும் நீர் அருந்தவும் உரிமையளித்தது ஏன்?'' என்று கேட்டது.

சிங்கம், ''நண்பர்களே! நான் செய்த செயல் சரியானதுதான்'' என்று கூறித் தன் இருப்பிடம் நோக்கிச் சென்றது.

மாணவர்களே! சிங்கம் ஏன் குதிரையைக் கொல்லவில்லை? சிங்கம் செய்த செயல் எவ்வாறு சரியானதாகும்? சிந்தித்து விடை கூறுங்கள்.

'வண்டி இழுக்கும் நல்ல குதிரை, - நெல்லு
வயலில் உழுதுவரும் மாடு,
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு, - இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா'.

- பாரதியார்

## குறியீடுகளுக்கு உரிய விளக்கத்தை நினைவிற் கொள்க.

* ஒரு சொற்றொடரில் பொருள் முடிவு பெற்றதை உணர்த்துவதற்காக இடும் குறி . முற்றுப்புள்ளி.
* ஒரு தொடரில் பொருள்கள் பல தொடர்ந்து வரும் போது இடப்பெறும் குறி , காற்புள்ளி.
* ஒரு சொற்றொடரில் ஓர் எழுவாய், பல பயனிலைகளைப் பெற்றுவரும் போது சொற்றொடரின் ஒவ்வொரு பயனிலையின் இறுதியிலும் இடப் பெறும் குறி ; அரைப்புள்ளி.
* வினாப் பொருளைத் தரும் சொற்றொடரின் இறுதியில் இடப்பெறும் குறி ? வினாக் குறி.
* வியப்புப் பொருளை உணர்த்தும் சொல்லை அடுத்து இடப்பெறும் குறி ! வியப்புக் குறி.
* பழமொழி / அறிஞரின் பொன்மொழி / எடுததுக்காட்டு நிகழ்ச்சிகள் / ஒருவரின் கூற்று / ஆகியவற்றை எடுத்தாளும் போது சொற்றொடர்களின் தொடக்கத்தின் மேற்பகுதியிலும் முடிவின் மேற் பகுதியிலும் இடப்பெறும் குறியீடு ' ' ஒற்றை மேற்கோள் குறி.
* உரையாடலின் போது ஒருவரின் நேர்க் கூற்றாக வருவதைக் குறிக்க இடும் குறி " " இரட்டை மேற்கோள் குறி.



**செயல்கள்:**

**★ கீழ்க்காணும் விலங்குகளின் உரையாடல் களில் தேவையான குறியீடுகளை இடுக:-**



நீ என்னிடம் என்ன பேச விழைகின்றாய் விரைந்து கூறு என்று குதிரைக்கு ஆணையிட்டது.



ஐயா நான் தங்களின் ஆதரவை நாடி வந்துள்ளேன் தாங்கள்தான் எனக்கு அடைக்கலம் தரவேண்டும் என்று கெஞ்சியது.



ஓகோ இந்தப் புதுமையான குரலொலி இதனுடையதுதானா இதற்கா நாம் அஞ்சி நடுங்கினோம். இறங்கி வா நாம் போய் அதை விசாரிப்போம் என்றது.

**★ கீழ்க்காணும் பகுதியை 'ஒற்றைக் கோட்டுக் குறிப்பேட்டில்' சரியான வடிவில் இடைவெளி விட்டும், தகுந்த குறியீடுகளைப் பயன்படுத்தியும் எழுதுக:-**



ஆ ஐயோ பாவம் இந்த நாய்க் குட்டிகளுக்கு நாம் எப்படியாவது உதவ வேண்டும் இப்போது என்ன செய்யலாம் என்று சிந்தித்தான் மணி நம் தமிழாசிரியர் கூறிய வண்ணம் நீலச் சிலுவைச் சங்கத்திற்குத் தொலைபேசியில் செய்திகளைச் சொல்ல வேண்டும் அங்கே உள்ளவர்கள் இந்தக் குட்டிகளை எடுத்துச் சென்று அன்போடு வளர்ப்பார்களாமே சரி விரைவில் வீடு சென்று தொலைபேசி மூலம் செய்தியைத் தெரிவிக்கலாம் என்று கூறி நடந்தான்.

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

**"அரசே! அரசே! நாங்கள்தான், உமது நண்பர்கள்; ஓடாதீர்கள்! ஓடாதீர்கள்"**



### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

| | | | |
|---|---|---|---|
| மருண்டு | ________ | அண்டி | ________ |
| நயமாக | ________ | அடைக்கலம் | ________ |
| விழைகின்றார் | ________ | கருணை | ________ |

### இ) பிரித்து எழுதுக:-



மரத்திலிருந்து - ________ + ________

குரலொலி - ________ + ________

வாய்ச்சொல் - ________ + ________

சோகக்கதை - ________ + ________

### ஈ) அடிக்கோடிட்டுள்ள சொல்லிற்குரிய எதிர்ச் சொல்லைக் கோடிட்ட இடத்தில் நிரப்புக / படிக்க:-



1) நம் காட்டிற்குள் பலம் பொருந்திய ________ ஒருவன் நுழைந்து விட்டான்; **நண்**பர்களாகிய நீங்கள்தான் உதவ வேண்டும்.

2) மரத்தின் உச்சிக்கு **ஏறிச்**சென்ற குரங்குகள் குதிரையைக் கண்டபின் மரத்திலிருந்து ________ வந்தன.

3) நீங்களோ மிகவும் **நல்லவர்**, அவரோ மிகவும் ________.

### உ) சரியான விடையைத் தேர்ந்தெடுக்க. அவற்றை உரிய நிறுத்தற் குறிகளுடன் எழுதுக:-

**1) சிங்கம் ஓடி வருவதைக் கண்டு குரங்குகள் கூறியவை.**

★ என்ன இது இதுவரை நாம் காணாத காட்சியாக இருக்கிறது

* என்ன நம  அரசர் அரக்கப்பரக்க ஓடி வருகிறாரே
* நீங்கள் யார் எங்கிருந்து ஓடிவருகின்றீர்

2) சிங்கத்தைத் தைரியப்படுத்தக் கோணங்கி கூறிய பழமொழி:

* வாய்ச் சொல் வீரர்கள் வாள் வீச மாட்டார்கள்
* பயந்தவன் கண்ணுக்குப் விழுதும் பாம்பு
* குரைக்கின்ற நாய் வேட்டைக்கு உதவாது

3) குதிரை சிங்கத்திடம் கெஞ்சிக் கேட்டது என்ன?

* குதிரை வண்டிக்காரனைத் தண்டிக்க வேண்டும் எனக் கேட்டது
* ஐயா நான் தங்களின் ஆதரவை நாடி வந்துள்ளேன் தாங்கள்தான் எனக்கு அடைக்கலம் தரவேண்டும் என்று கெஞ்சியது
* குரங்குகளிடமிருந்து தன்னைப் பாதுகாக்க வேண்டும் என்று கேட்டது

4) சிங்கம் குதிரையிடம்

* பயப்படாதே நான் உனக்குப் பாதுகாப்பு அளிக்கிறேன் என்றது
* நீ இக்காட்டை விட்டு உடனே வெளியேறு என்று கூறியது
* நீ தினமும் வந்து என்னைப் பணிந்து செல்ல வேண்டும் என்று கட்டளையிட்டது.

5) குரங்குகள் குதிரையின் பக்கத்தில் மெதுவாகச் சென்று

* சிங்கத்தை உதைத்துக் கொன்று விடு என்றன
* சிங்கத்தைக் கண்டு அஞ்ச வேண்டா  அது கோழை என்றன
* குதிரையாரே குதிரையாரே வணக்கம் நீர் யார் எங்கிருந்து வந்தீர் என்றன

## ஊ) சரியான எழுத்தால் நிரப்புக:-

1. தலை தெ __ க்க - ரி / றி
2. சற்றுப் பொ __ ங்கள் - ரு / று
3. குரலொ __ - ளி / லி
4. பு __ ப்படுங்கள் - ற / ர
5. இ __ ங்கி வா - ர / ற
6. உடல் மெ __ ந்து - ளி / லி
7. ஓடி ஒ __ ந்து - ளி / லி
8. ஆ __ யிட்டது - னை / ணை
9. அடைக்க __ ம் - ல / ள
10. சி __ த்துடன் - ண / ன

## எ) சொற்றொடரில் சொற்கள் சேர்ந்துள்ளன. அவற்றைப் பொருள்புரியும் வண்ணம் பிரித்து எழுதுக / படிக்க:-

1. இங்குச் சுத்தமானபசு, நெய்வெண்ணெய் விற்கப்படும்.
2. அப்பாஎனக்கு ஒருகால் பந்து வாங்கித் தாருங்கள்.
3. ஒருவயதான பாட்டிவடை சுட்டுவிற்றாள்.

## ஏ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. சிங்கம் ஏன் பயந்து ஓடியது?
2. குதிரை வண்டிக்காரன் குதிரைக்குத் தந்த உணவு யாது?
3. குதிரை சிங்கத்தின் முன் ஏன் மருண்டு கனைத்தது?
4. சிங்கம் குதிரைக்கு அளித்த உரிமை யாது?
5. சிங்கம் குதிரையைக் கொல்லாததற்கு நீ கருதும் காரணங்களைக் கூறுக.

# 14 நானிலம் போற்றும் நல்லாசிரியர்



ஆசிரியராக இருந்து குடியரசுத் தலைவராக உயர்ந்தவர்; 'தத்துவ மேதை' எனப் புகழப்படுபவர்; தம் பிறந்த நாளை 'ஆசிரியர் தின'மாகக் கொண்டாட விரும்பியவர். இத்தகைய பெருமைகளுக்கெல்லாம் உரியவர் டாக்டர் இராதாகிருஷ்ணன் என்ற மாமனிதர் ஆவார்.



**பிறப்பும் கல்வியும் :** 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்பார் வள்ளுவர். இவ்வாக்கின்படி 1888 ஆம் ஆண்டு, செப்டம்பர் 5 ஆம் நாள் திரு. இராதாகிருஷ்ணன் திருத்தணியில் பிறந்தார். இவரது தந்தையார் திரு. வீராசாமி; தாயார் திருமதி சீதம்மாள். 'கற்க கசடற' என்பதற்கேற்பத் தொடக்கக் கல்வியைத் திருத்தணியிலும் திருப்பதியிலும் சிறப்பாகக் கற்றார். தம் உயர்கல்வியை வேலூரிலும் சென்னையிலும் கற்றுத் தேர்ந்தார்.

**ஆசிரியர் பணி :** டாக்டர் இராதாகிருஷ்ணன் சென்னை மாநிலக் கல்லூரியில் துணைப் பேராசிரியராகத் தம் பணியைத்

---

**திறன் :** எளிமையான கட்டுரைகளை எழுதுதல்.

தொடங்கினார். பின்னர், அதே கல்லூரியில் தத்துவப் பேராசிரியரானார். தம்முடைய கனிவான தோற்றத்தாலும், கற்பித்தல் திறத்தாலும் மாணவர் உள்ளங்களைக் கொள்ளை கொண்டார். மாணவர்களுக்கு நல்ல நண்பராகவும் வழிகாட்டியாகவும் திகழ்ந்தார்.

பின்னர் மைசூர்ப் பல்கலைக்கழகத்தில் தத்துவப் பேராசிரியரானார். அன்னாரின் புகழ் பல்கலைக்கழகங்கள் எங்கும் பரவியது. இந்தியாவில் உள்ள எல்லாப் பல்கலைக் கழகங்களும் டாக்டர் இராதாகிருஷ்ணனைப் பணியமர்த்த விரும்பி அழைத்தன. ஆனால் அவர் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் பணியை ஏற்க விரும்பினார்.

1921 இல் மைசூர்ப் பல்கலைக் கழகத்திலிருந்து பிரியா விடைபெற்றார். பல்கலைக்கழகமே திரண்டு வந்து அவரை வழியனுப்பியது. அவ்வமயம் மாணவர்கள் செய்த செயல் அனைவரையும் வியக்க வைத்தது. கல்கத்தா செல்வதற்காகத் தொடர்வண்டி நிலையம் வரை குதிரை வண்டி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மாணவர்கள் குதிரைகளை அகற்றிவிட்டு அவர் இருந்த வண்டியைத் தாங்களே இழுத்துச் சென்றனர். இக்காட்சியைக் கண்ட மக்கள் மனம் நெகிழ்ந்தனர். மாணவர்தம் அன்பை எண்ணி எண்ணி அப்பெருமகனார் மனம் நெகிழ்ந்தார்.

### பல்கலைக் கழகங்கள் பாராட்டு:

இவருடைய ஆசிரியப் பணியால் கல்கத்தாப் பல்கலைக் கழகம் புகழடைந்தது. இவர் கடல்மடை திறந்த வெள்ளம் போல ஆங்கிலத்தில் பேசும் ஆற்றல் வாய்ந்தவர். இதனையறிந்த 'பிரிட்டிஷ் அகாடமி' இவரைச் சொற்பொழிவாற்ற அழைத்தது. ஆசியாக் கண்டத்திலிருந்து அகாடமியில் பேச முதன்முதலாக அழைக்கப்பட்டவர் இவரே. உலகப் பல்கலைக் கழகங்கள் இவருக்குப் பதினேழு முறை 'டாக்டர்' பட்டம் வழங்கிச் சிறப்பித்தன.

**நாட்டுப் பணி** : இவர் ஆசிரியர் பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார்; அத்துடன் நாட்டு விடுதலையிலும் நாட்டம் கொண்டார். அண்ணல் காந்தியடிகள், நேரு போன்ற தலைவர்களுடன் இணைந்து நாட்டு விடுதலைக்குப் போராடினார். சுதந்திர இந்தியாவில் இரண்டுமுறை இந்தியக் குடியரசின் துணைத்தலைவராகப் பொறுப்பேற்றார். 1962 இல் இந்தியக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். உலகத் தலைவர்களின் பாராட்டைப் பெற்றார்.

**ஆசிரியர் தினம்** : இவர் இந்தியக் குடியரசுத் தலைவராகப் பதவி வகித்தாலும், 'தாம் ஓர் ஆசிரியர்' என்பதிலேயே பெருமை கொண்டார். அதனால் தம் பிறந்தநாளை 'ஆசிரியர் தின'மாகக் கொண்டாட விரும்பினார். அவரது விருப்பப்படியே அவரது பிறந்தநாள் 'ஆசிரியர் தின'மாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அந்நாளில் மைய, மாநில அரசுகள் சிறந்த ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்து தேசிய / மாநில விருதுகள் வழங்கிச் சிறப்பித்து வருகின்றன. சிறப்பாகத் தமிழக அரசு, 1997 ஆம் ஆண்டு முதல் இவ்விருதை 'டாக்டர் இராதாகிருஷ்ணன்' விருது என்றே வழங்கி வருகிறது.

நானிலம் போற்றும் இந்த நல்லாசிரியருக்கு மைய அரசு 'பாரத ரத்னா' விருது வழங்கிப் பெருமைப்படுத்தியது. மாநில அரசும், சென்னையில் கடற்கரையிலிருந்து அண்ணா மேம்பாலம் வரை உள்ள சாலைக்கு இவர் பெயரைச் சூட்டிச் சிறப்புச் செய்துள்ளது. உலகம் போற்றும் தத்துவ மேதையான இவர் 1975 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினேழாம் நாள் இயற்கை எய்தினார். **மாமேதை மறைந்தாலும் அவர் புகழ் என்றும் மறையாது.**

*கல்வி என்பது எழுத்தறிவை மட்டுமே கொடுக்கக் கூடியதாக இருக்கக் கூடாது. அது மனிதனைச் சிந்திக்க வைக்கக் கூடியதாகவும், புரிந்து கொள்ள வைப்பதாகவும், பொறுமை வளர்ப்பதாகவும் இருத்தல் வேண்டும்.*

- டாக்டர் இராதாகிருஷ்ணன்



## செயல்கள்

★ உன் வீட்டில் வளர்க்கும் ஒரு செல்லப் பிராணியைப் பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

★ கீழ்க் குறிப்பிட்டுள்ள மரங்களைப் பற்றிப் பத்து வரிகள் எழுதுக:

1. வாழை மரம்  2. தென்னை மரம்

★ பின்வரும் குறிப்புகளைப் பயன்படுத்திக் கட்டுரை ஒன்று எழுதுக:

### எங்கள் ஊர்

ஊர்ப் பெயர் - வீடுகள் - வீடுகளின் வகைகள் - கோயில்கள் - பள்ளிக் கட்டடம் - கடைகள் - அஞ்சலகம் - தொழில்கள் - விழாக்கள்.

★ டாக்டர் இராதாகிருஷ்ணன் கட்டுரையிலிருந்து கீழே கொடுக்கப்பட்டுள்ள தலைப்புகளில் பத்து வரிகள் எழுதுக:

1. டாக்டர் இராதாகிருஷ்ணனின் ஆசிரியர் பணி.
2. டாக்டர் இராதாகிருஷ்ணனின் நாட்டுப் பணி.
3. ஆசிரியர் தினம்.

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

| | |
|---|---|
| புகழப்படுபவர் | வழிகாட்டி |
| பல்கலைக் கழகம் | சொற்பொழிவு |
| அழைத்தன | நெகிழ்ந்தனர் |

### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-



| | | | |
|---|---|---|---|
| நானிலம் | __________ | விருது | __________ |
| தத்துவம் | __________ | கண்டம் | __________ |
| நாட்டம் | __________ | மேதை | __________ |



## இ) பிரித்து எழுதுக:-

தொடக்கக் கல்வி = ________ + ________

மாநிலக் கல்லூரி = ________ + ________

பல்கலைக் கழகம் = ________ + ________

நானிலம் = ________ + ________

## ஈ) எதிர்ச்சொல் எழுதுக:-

மேதை x ________________

பெருமை x ________________

புகழ் x ________________

உயர்ந்த x ________________

போற்றும் x ________________

இயற்கை x ________________

## உ) கோடிட்ட இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக:-



1. டாக்டர் இராதாகிருஷ்ணன் பிறந்த நாளைத்தான் ____________ கொண்டாடுகிறோம்.
2. இராதாகிருஷ்ணன் தமது தொடக்கக் கல்வியைத் ____________ ____________ பயின்றார்.
3. மாணவர்களுக்கு நல்ல நண்பராகவும் ____________ திகழ்ந்தார்.
4. பல்கலைக் கழகமே ____________ வந்து அவரை வழியனுப்பியது.
5. தாம் ஓர் ____________ என்பதிலேயே பெருமை கொண்டார்.
6. பாரதத்தின் மிக உயரிய ____________ ____________ விருது இவருக்கு வழங்கப் பெற்றது.

## ஊ) கொடுக்கப்பட்டுள்ள சொற்களைப் பயன்படுத்தி உரையாடலை நிரப்பிப் படிக்க / தொடர்க:-

அஞ்சல்காரர் : ஐயா! கடிதம் வந்துள்ளது.

தந்தை : கலையரசி! நீ சென்று __________ வா.

கலையரசி : அப்பா! கடிதத்தை வாங்கி வரச் __________.

அஞ்சல்காரர் : அம்மா! இது __________ அஞ்சல். அப்பாவின் கையொப்பம் பெற வேண்டும்.

கலையரசி : அப்பா! அது பதிவஞ்சலாம். நீங்கள் __________ இட வேண்டுமாம்.

தந்தை : அப்படியா, சரி வருகிறேன்.

கலையரசி : __________ என்றால் என்ன அப்பா?

**(சொன்னார், பதிவஞ்சல், பதிவு, கையொப்பம், வாங்கி)**

## எ) பொருத்துக:-

| | | |
|---|---|---|
| ஆசிரியர் தின விழா | - | ஆகஸ்டு பதினைந்து |
| குழந்தைகள் தின விழா | - | தைத் திங்கள் முதல் நாள் |
| குடியரசு தின விழா | - | செப்டம்பர் ஐந்து |
| விடுதலை நாள் விழா | - | ஜனவரி இருபத்தாறு |
| பொங்கல் விழா | - | நவம்பர் பதினான்கு |



## ஏ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. டாக்டர் இராதாகிருஷ்ணன் எங்கு, எப்போது பிறந்தார்? அவரின் பெற்றோர் யாவர்?
2. டாக்டர் இராதாகிருஷ்ணன் மனம் நெகிழ்ந்ததற்குக் காரணமான நிகழ்ச்சியை விவரி.
3. பல்கலைக் கழகங்கள் டாக்டர் இராதாகிருஷ்ணனை எவ்வாறு பாராட்டிப் பெருமைப்படுத்தின?
4. தமிழக அரசு டாக்டர் இராதாகிருஷ்ணனைப் பெருமைப் படுத்திச் செய்துள்ள செயல்களைச் சுருக்கி எழுதுக.

# 15 சிந்தனையே வெற்றி!



'செல்வபுரி' அக்காலத்தே மிகவும் புகழ்பெற்று விளங்கிய பட்டினம் ஆகும். அப்பட்டினத்தில் 'அறிவு நம்பி' என்னும் சிறுவன் தன் பெற்றோருடன் வசித்துவந்தான். எப்பொருள் பற்றியும் நுட்பமாகச் சிந்திக்கும் ஆற்றல் அவனிடம் இயல்பாகவே அமைந்திருந்தது. அதனால், அப்பட்டினத்தில் அவனைச் 'சிந்தனைச் செல்வன் அறிவு நம்பி' என்று அனைவரும் பாராட்டினர்.

ஒரு சமயம் அறிவு நம்பி தன் நண்பர்களுடன் பக்கத்து ஊருக்குச் சென்றுகொண்டிருந்தான். வழியில் ஒரு மரத்தில் ஏராளமான பழங்கள் பழுத்துத் தொங்கிக் கொண்டிருந்தன. நண்பர்கள் ஆவலுடன் அதைப் பறித்துத் தின்ன விரும்பினர். ஆனால் அறிவு நம்பியோ, ''இவை உண்ணக்கூடிய பழங்கள் அல்ல,'' என்றான். தோழர்கள், ''உனக்கு எப்படித் தெரியும்? நீ எவ்வாறு இதை உண்ணக் கூடாத பழங்கள் என்று சொல்கிறாய்?'' என்று வியப்புடன் கேட்டனர்.

அறிவு நம்பி அமைதியாக, ''மக்கள் செல்லும் வழியில் உள்ளது இம்மரம். சாப்பிடக்கூடியதாக இருந்தால் மக்கள் இவற்றைப் பறிக்காமல் விட்டுவைப்பார்களா?'' என்றான். ஆனால்அவனுடைய நண்பர்கள் இதை நம்பவில்லை.உடனே, எதிரே நடந்துவரும் முதியவரிடம் சென்று, ''பழங்களைப் பறித்துப் புசிக்கலாமா?'' என்று கேட்டனர். அம்முதியவர் பதற்றத்துடன், ''ஐயோ! அவற்றைத் தொடாதீர்கள். அவற்றை உண்டால் உயிருக்கே ஆபத்தாகிவிடும்!'' என எச்சரித்தார். அறிவு நம்பியின் ஊகித்தறியும் திறனை எண்ணி நண்பர்கள் வியந்தனர்.

---

***திறன் :** வாய்மொழி எழுத்துரைத் தகவலில் அனுமானங்கள் ஊகித்தறிதல்.*

ஒரு நாள் விடியற்காலை நேரம். மணி என்னும் இளைஞன் அறிவு நம்பியிடம் ஓடோடி வந்தான். ''தம்பி, நான் மோசம் போய்விட்டேன், எனக்கு நீங்கள்தான் நல்வழி கூற வேண்டும்'' என்று அழுதான்.



உடனே நம்பி, ''நடந்ததைக் கூறுங்கள், என்னால் முடிந்ததைச் செய்கிறேன்'' என்றான். மணியும், ''தம்பி, எங்கள் பெற்றோர் ஒரு பசுமாட்டையும், ஒரு கம்பளிப் போர்வையும், ஒரு தென்னை மரத்தையும் சொத்தாக வைத்து விட்டுச் சென்றனர். என் அண்ணன் இவற்றைப் பிரிக்கும் போது எல்லாவற்றிலும் பாதிப் பாதியாகப் பங்கிட்டார். நானும் நல்லதுதானே செய்கிறார் என்று ஏற்றுக் கொண்டேன். எனக்குப் படிப்பறிவு இல்லாததால் அவர் சொன்னதை நம்பி ஏமாந்து விட்டேன்'' என்றான்.

''மணி, உன் அண்ணன் சரியாகத்தானே பிரித்துள்ளார்'' என்றான் அறிவு நம்பி. மணி தேம்பிக்கொண்டே, ''இல்லை தம்பி, பசுமாட்டை இருபாகமாய்ப் பிரித்து, முன்பகுதி எனக்கும் பின்பகுதி அவருக்கும் எனக் கூறினார். மாட்டிற்கு இரை போடுவது, தண்ணீர் காட்டுவது எல்லாம் என் வேலை. ஆனால், பாலை அவர் கறந்து கொள்கிறார். தென்னை மரத்தில் அடிப்பகுதி எனக்கும் மேற்பகுதி அவருக்கும் எனப் பிரித்தார். தண்ணீர் ஊற்றுவது என் வேலை. தேங்காய்களை அவர் பறித்துக் கொள்கிறார். கம்பளியைப் பகலில் நானும் இரவில் அவருமாக வைத்துக் கொள்கிறோம். இதனால் இரவில் குளிரால் நான் துன்பப்படுகிறேன். நான் என்ன செய்வேன்?'' என்று வருந்தினான்.

அறிவு நம்பிக்கு, மணியின் அண்ணன் எவ்வாறு தன் தம்பியை ஏமாற்றியுள்ளான் என்பது தெளிவாகியது. உடனே சிந்தித்தான். ஒரு வழியைக் கூறி அதன்படிச் செய்யச் சொன்னான். அதுபோலவே மணியும் செய்ய, அண்ணனுக்கு மிகவும் தொல்லை ஆகிவிட்டது. உடனே நேர்மையாகப் பங்கைப் பிரித்துக் கொடுத்துவிட்டான்.

அறிவு நம்பி மணியிடம், கம்பளியை இரவில் அண்ணனிடம் கொடுக்கும் போது நனைத்துக் கொடு என்று ஆலோசனை கூறினான்.

பசு, தென்னை மரத்தைப் பங்கிட என்ன வழி கூறியிருப்பான்? சிந்தித்துக் கூறுக.

இவ்வாறு பல வழிகளிலும் மக்களுக்கு உதவி செய்து வந்ததால் அவன் புகழ் பட்டினம் முழுவதும் பரவியது.

ஒரு நாள் செல்வபுரியின் தலைமை அமைச்சர் அறிவு நம்பியைத் தேடி வந்தார். அறிவுநம்பி அமைச்சரைப் பணிவுடன் வரவேற்றான். அமைச்சர், ''நம்பி, நீ உடனே அரசவைக்கு வரவேண்டும். அரசர் உன்னை அழைத்துவரச் சொன்னார்'' என்று கூறினார். நம்பியோ காரணம் தெரியாது திகைத்தான்.

உடனே அமைச்சர், ''வேற்றுநாட்டுத் தூதுவன் ஒருவன் அரசவைக்கு வந்தான். மன்னர் முன் ஒரு வட்டம் வரைந்தான்; அதைச் சுற்றிச் சில முத்துகளை வைத்தான்; உள்ளே ஒரு பிடி தானியங்களை இரைத்தான்; பிறகு பேசாமல் தனது இடத்தில் போய் அமர்ந்துகொண்டான். இதன் விளக்கம் யாருக்கும் புரியவில்லை. அதுதான் அரசர் உன்னை அழைத்துவரச் சொன்னார்'' என்றார். நம்பி சிறிதுநேரம் சிந்தித்தான். உடனே ஒரு கோழியையும் ஊசி நூலையும் எடுத்துக் கொண்டு அரசனின் அவைக்குப் புறப்பட்டான்.



அவை கூடி இருந்தது. எல்லாரும் கற்சிலை போல வீற்றிருந்தனர். அறிவு நம்பி விரைந்து சென்று, முத்துகளை எடுத்து ஊசி நூலால் கோத்து மாலையாக்கினான். அதை மன்னனிடம் அளித்து அணிந்துகொள்ள வேண்டினான். தான் கொண்டு வந்த கோழியைக் கீழே விட்டான். அது அங்குச் சிதறிக் கிடந்த தானியங்களை ஒன்றுவிடாமல் கொத்தித் தின்றது. வந்த தூதுவனோ தான் வந்த சுவடு தெரியாமல் சென்று விட்டான்.

அங்கு நடந்தவற்றை அனைவரும் கண் இமைக்காமல் பார்த்தனர்; பொருள் விளங்காது குழம்பினர். மன்னன், நம்பியிடம் விளக்கம் கேட்டார். நம்பி, ''மன்னர் மன்னா! வந்த தூதுவன் அண்டை நாட்டுக்காரன். அவன் நமது கோட்டையை முற்றுகையிடப் போவதாகவும், தேர்ப்படைகளைச் சுற்றிலும் நிறுத்தப் போவதாகவும், போர்வீரர்கள் கோட்டைக்குள் புகுந்து தங்களை வெற்றி கொள்வர் என்றும் சைகைகளால் உணர்த்தினான்.

''நானோ! என் மன்னன் எதிரிகளது தேர்ப்படைகளை அழித்து அதில் உள்ள முத்துகளைக் கோத்து ஆபரணமாக அணிந்து கொள்வான் என்றும், தானிய மணிகளைக் கோழி கொத்தித் தின்றதைப் போல் எங்கள் வீரர்கள் எதிரிகளை அழிப்பார்கள் என்றும், முற்றுகையிட்டால் வேரோடு அழிப்போம் என்றும் குறிப்பால் உணர்த்தினேன். அவனும் புரிந்து கொண்டு சென்று விட்டான்'' என்றான்.

மன்னன், ''ஆகா! அற்புதம்! தம்பி, நீதான் உண்மையிலேயே அறிவுடைய நம்பி!'' என்று புகழ்ந்து பாராட்டினார். பொன்னும் மணியும் அளித்து நம்பியைப் பெருமைப்படுத்தினார். நம்பி செல்வமும் புகழும் பெற்று நீடு வாழ்ந்தான்.

போற்ற வேண்டியவை உண்மை - உழைப்பு - உயர்வு.
பின்பற்ற வேண்டியவை கனிவு - பணிவு - துணிவு.
பேண வேண்டியவை கடமை - கண்ணியம் - கட்டுப்பாடு.
- அறிஞர் அண்ணா



செயல்கள்

★ *பின்வரும் கதைகள் உணர்த்தும் நீதிக் கருத்துகளைக் கூறுக / எழுதுக.*

*அ) சிங்கமும் நான்கு எருதுகளும்.*

______________________________

*ஆ) சிங்கத்தைக் கொன்ற சிறுமுயல்.*

______________________________

★ *ஔவையார் மாடு மேய்க்கும் சிறுவனிடம், நாவற்பழங்கள் பறித்துப் போடுமாறு கேட்டார். அச்சிறுவன் 'சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?' என்று வினவினான்.*

*சுட்ட பழம் என்பது* ______________________________

*சுடாத பழம் என்பது*______________________________

★ *மக்கள் தொகை பெருகுவதால் ஏற்படும் விளைவுகளைக் கூறுக / எழுதுக.*

★ *ஒரு செய்தித்தாளில், 'விஞ்ஞானி எச்சரிக்கை - குடிநீர் பற்றாக்குறை ஏற்படும்' என்று அச்சிடப்பட்டிருந்தது.*

குடிநீர் பற்றாக்குறைக்கான காரணங்களையும், பற்றாக்குறையால் நாட்டில் ஏற்படும் விளைவுகளையும் சிந்தித்துக் கூறுக / எழுதுக.

* இரண்டு குழுவாகப் பிரிந்து கொள்க. ஒரு குழு ஒரு விடுகதை கூற, மற்ற குழு அதன் விடையைச் சிந்தித்துக் கூறுக. குழுவை மாற்றி இச்செயலைத் தொடர்க.

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

| | | |
|---|---|---|
| யழங்கள் | குழப்பம் | அழைத்து |
| வழிகூறி | கோழி | தெளிவு |
| அழுதான் | கீழே | பதற்றம் |

### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-



| | | | |
|---|---|---|---|
| முதியவர் | ________ | புசிக்கலாமா | ________ |
| புகழ் | ________ | இல்லம் | ________ |
| தூதுவன் | ________ | அண்டை | ________ |
| முற்றுகையிடல் | ________ | ஆபரணம் | ________ |
| பட்டினம் | ________ | சுவடு | ________ |



### இ) பிரித்து எழுதுக:-

ஊகித்தறியும் = ________ + ________

பதற்றமில்லாமல் = ________ + ________

செய்ததையெல்லாம் = ________ + ________

மாலையாக்கினான் = ________ + ________

அரசவை = ________ + ________

கற்சிலை = ________ + ________

ஈ) சேர்த்து எழுதுக:-

அ + பட்டினம் = ___________

தெளிவு + ஆகியது = ___________

வேறு + நாடு = ___________

தேர் + படை = ___________

ஊகித்து + அறியும் = ___________

உ) சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக:-

**1. அறிவு நம்பி, ''இவை உண்ணத்தகுந்த பழங்கள் அல்ல'' என்றான். ஏனெனில்,**

அ) காட்டில் பழுத்து இருந்ததால்

ஆ) மக்கள் யாரும் பறிக்காததால்

இ) பழங்களைப் பறிக்க முடியாததால்

**2. தம்பிக்கு உரிய பங்கைக் கொடுக்காமல் அண்ணன், ஏமாற்றினான். ஏனென்றால்,**

அ) தம்பி சோம்பேறி என்பதால்

ஆ) தம்பி முரடன் என்பதால்

இ) தம்பிக்குப் படிப்பறிவு இல்லாததால்.

**3. வேற்று நாட்டுத் தூதுவன் மன்னன் முன் வட்டமாகக் கோடு வரைந்தான்.**

அ) கோட்டையை முற்றுகையிடப் போகிறோம் என்பதை அறிவிப்பதற்கு

ஆ) உலகம் முட்டை வடிவமானது என்பதற்காக.

இ) அரசன் வட்டத்திற்குள் வந்து அமரவேண்டும் என்பதற்காக.

**4. தூதுவன் தானியங்களை இரைத்ததன் நோக்கம்**

அ) தானியங்கள் அதிகம் விளைகின்றன என்பதற்கு.

ஆ) தானியங்களைக் கப்பமாகச் செலுத்தவேண்டும் என்பதற்காக.

இ) எங்களிடம் ஏராளமான போர்வீரர்கள் உள்ளனர் என்பதை அறிவிக்க.

**5. நம்பி முத்துகளை மாலையாகக் கோத்ததன் நோக்கம்**

அ) மாலை கட்டத் தெரியும் என்று அறிவிப்பதற்கு

ஆ) தேர்ப்படைகளை அழித்து அதில் உள்ள முத்துகளை மாலையாகக் கட்டி அணிவோம் என்பதற்கு

இ) முத்துமாலை அணியும் விருப்பத்தால்.

**ஊ) காந்தியடிகள் போற்றிய மூன்று குரங்குப் பொம்மைகளின் படங்கள் கீழே கொடுக்கப் பட்டுள்ளன. அவை பேசாமல் பேசும் கருத்துகளைக் கூறுக/ எழுதுக:-**



**எ) பின்வரும் புதிர்களுக்கான விடையை ஊகித்து எழுதுக.**

1. தாளைக் கொடுத்தால் தின்னும்;
   தண்ணீர் குடித்தால் மடியும்-அது என்ன?

| | | | |
|---|---|---|---|
| | | | பு |

2. வட்ட வட்டப் பாய்; வாழ்வு தரும் பாய்;
   ஊரெல்லாம் சுற்றும் பாய் ஒவ்வொருவரும்
   விரும்பும் பாய் ....அது என்ன?

| | | |
|---|---|---|
| ரூ | | |

| | | | |
|---|---|---|---|
| மி | | | |

3. கண் சிமிட்டும் ஒன்று
   மணி அடிக்கும் மற்றொன்று
   கண்ணீர் வடிக்கும் இன்னொன்று
   இவை என்ன?

| | |
|---|---|
| | |

| | |
|---|---|
| ம | ழை |

4. காது பெரிது- கேளாது;
வாய் பெரிது- பேசாது;
வயிறு பெரிது- உண்ணாது.
அது என்ன?

| | | |
|---|---|---|
| அ | | |

5. யானை விரும்பும்; சேனை விரும்பும்
அடித்தால் வலிக்கும்; கடித்தால் இனிக்கும்
-அது என்ன?

| | | | |
|---|---|---|---|
| | | | பு |

6. வந்ததுதான் வந்தீர்களே
வந்து ஒருதரம் போனீர்களே
போய் ஒருதரம் வந்தீர்களே
இனிப் போனால் வருவீர்களா? அது என்ன?

| | |
|---|---|
| | ல் |

## ஏ) குறிப்புகளைப் பயன்படுத்திப் புதிருக்கான விடையைக் கட்டத்தில் எழுதுக:-

1. இது ஒரு நகர் - முதல் இரு எழுத்துகள் மரியாதையைக் குறிக்கும் - இறுதி இரு எழுத்துகள் பயிரைக் காக்கும் - நடுவில் உள்ள இரு எழுத்துகள் உணவாகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தி | | | | | லி |

2. இது ஒரு பூ-முற்பகுதி ஆதவனின் மறுபெயர்-பிற்பகுதி தேசத் தந்தையைக் குறிக்கும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூ | | | | | தி |

## ஐ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. பழங்கள் உண்ணத் தகுந்தன அல்ல என்று அறிவுடை நம்பி எவ்வாறு ஊகித்தான்?
2. மணியின் அண்ணன், மணிக்கு எவ்வாறு பங்கு பிரித்துக் கொடுத்தான்?
3. மணிக்கு, நம்பி என்னென்ன ஆலோசனைகள் கூறியிருப்பான்?
4. வேற்றுநாட்டுத் தூதுவன், மன்னன் முன் என்ன செய்தான்?
5. அறிவு நம்பி, தன் செயலுக்கு மன்னரிடம் கூறிய விளக்கம் யாது?

# 16 நாடு நலம் பெற...



பூம்பொழில் ஓர் அழகிய நாடு. அந்நாட்டில் எத்திசை நோக்கினும் குன்றுகள், ஆறுகள், வயல்கள் எனப் பசுமை கொஞ்சும். எங்கும் வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும். செந்நெல்லும், மஞ்சளும், செங்கரும்பும், கனிகளும் வளம் கொழிக்கும். வீதிகளும் வீடுகளும் நேர் நேராக அமைந்து அந்நாட்டிற்கு அழகூட்டும்.

பூமார்பன் என்னும் மன்னன் புன்னகையும் பூரிப்புமாய் அந்நாட்டை ஆண்டான். அமைச்சரும், அறிஞரும் ஆலோசனை வழங்கினர். அதனால் நீதியும் நேர்மையும் நிலைகொண்டது. மக்களும் மகிழ்ச்சியோடு நலமாய், வளமாய் வாழ்ந்தனர்.



காலப்போக்கில் செல்வத்தின் பெருக்கம் மன்னனுக்குச் செருக்கைத் தந்தது. மன்னன் சுகத்திலும் மூடச் செயல்களிலும் தன் சிந்தையைச் செலுத்தினான். நாட்டையும் மக்களையும் மறந்தான். அமைச்சர்கள், அறிஞர்களின் அறிவுரைகளையும் தவிர்த்தான்.

மன்னன் வழியே மக்களும் உழைப்பை மறந்தனர்; கேளிக்கைகளில் காலம் கழித்தனர். இதனால் முப்போகம் விளைந்த வயல்களில் ஒரு போகமும் விளையவில்லை; பொன் கொழித்த வயல்களில் புற்களும் முளைக்கவில்லை.

---

***திறன் :** வாய்மொழியைக் கேட்டும் உரைநடையைப் படித்தும் அப்படியானால்... பிறகு... அப்படியில்லாவிட்டால்... பிறகு என்ற வினாக்களுக்கு விடை கூறுதல்.*

நாளுக்கு நாள் நாட்டின் நிலை மோசமாயிற்று. மக்கள் வீதிகளில் போராட்டம் நடத்தினர்; அரண்மனையை முற்றுகையிட்டனர்; மன்னனுக்கு எதிராகக் கலகம் செய்தனர். அமைச்சரும் அறிஞரும் அமைதிப்படுத்தியும் கலவரம் ஓயவில்லை. இதையறிந்த மன்னன் சினம் கொண்டு படைத் தலைவரை அழைத்தான். ''கலகத்தை உடனே ஒடுக்கு; அமைச்சரையும் அறிஞர்களையும் நாடு கடத்து'',என ஆணையிட்டான். படைத்தலைவரும் மன்னன் ஆணைப்படி கலகத்தை அடக்கினார்; அமைச்சரையும் அறிஞர்களையும் கப்பலில் ஏற்றி நாடு கடத்தினார்.

அமைச்சரையும் அறிஞர்களையும் ஏற்றிய கப்பல் நடுக்கடலில் சென்று கொண்டிருந்தது. திடீரென்று, பெருமழையும் சூறைக் காற்றும் சுழன்று சுழன்று அடித்தன. கடலின் கொந்தளிப்பால் கப்பல் தடுமாறியது. இரவும் வந்து விட்டது. கப்பலோட்டியோ செய்வதறியாது திகைத்தார். ''புயலின் கொடூரம் நீடித்தால் யாரும் தப்பவே முடியாது. இனி என்னால் ஆவது ஒன்றும் இல்லை'', என்று கூறினார்.

அமைச்சரும் அறிஞர்களும் பதறினர். 'அப்படியானால் எங்கள் கதி என்ன?' என்று அலறினர். ''எப்படியாவது நீங்கள் தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும். அப்படி இல்லாவிட்டால், யார் எங்களைக் காப்பாற்றுவார்கள்,'' என்று கேட்டனர்.

காரிருள் மறைந்து காலை புலர்ந்தது. காற்றின் வேகம் தணிந்தது. தொலைவில் இருந்த தீவின் மக்கள் கடலில் கப்பல் தவிப்பதைக் கண்டனர். கட்டு மரங்களில் வந்து உயிருக்குப் போராடியவர்களைக் காப்பாற்றினர். கரை சேர்ந்தவர்கள் தீவிலுள்ள பழங்குடி மக்களுக்குத் தம் நன்றியைக் கூறினர்.

அமைச்சரும் அறிஞர்களும் தீவைச் சுற்றிப் பார்த்தனர். மக்கள் நாகரிகமற்ற பழங்குடியினராய் இருப்பதை அறிந்தனர்.

அத்துடன் வளமும் அழகும் நிரம்பிய அத்தீவு முன்னேற்றம் அடையாமல் இருப்பதையும் உணர்ந்தனர்.

ஓர் அறிஞர், ''இம்மக்களும் நம்மக்களே! இனி இத்தீவும் நமதே; ஆதலால் நாம் இத்தீவை முன்னேற்றத் திட்டமிட வேண்டும்,'' என்றார்.

அமைச்சரும், ''ஆம், இதுவே நாம் இவர்களுக்குக் காட்டும் நன்றியாகும்; அப்படி இல்லையென்றால் நாம் நன்றி மறந்தவர்களாவோம்'' என்றார். அறிஞர்களுள் ஒருவர், ''நம் மன்னர் நாட்டு மக்களின் நிலையறியாது நம்மை நாடு கடத்தி விட்டார். நாம் அங்கிருந்து நம் மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்ய முடியாமல் போய்விட்டதே!'' என்று கூறி வருந்தினார்.

''வருத்தத்தை விடுங்கள், அறிஞரே! அங்கு நாம் ஆற்ற வேண்டிய பணிகளை இத்தீவின் மக்களுக்கு ஆற்றுவோம். அதுவே நாம் இவர்களுக்குச் செய்யும் கைம்மாறு ஆகும்'' என்றார் அமைச்சர். அமைச்சரின் விருப்பப்படி அனைவரும் கலந்து ஆலோசித்துத் திட்டங்களை வகுத்தனர்; கடுமையாக உழைத்தனர்; அதனால் தீவில் உள்ள மக்கள் கல்வி, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றில் வளர்ச்சி பெற்றனர்

அமைச்சரும் அறிஞர்களும் கலந்து பேசி நாட்டைக் குடியரசு நாடாக்கினர். தீவில் உள்ள மக்கள் தங்களின் நன்றிப் பெருக்கைக் காட்ட விரும்பினர்.

தீவின் மக்கள் அனைவரும் ஒரு மனதாக அமைச்சரை நாட்டின் தலைவராக்கினர்; அறிஞர் ஒருவரைத் தலைமை அமைச்சராக்கினர்; அந்நாளைக் கொண்டாட மக்கள் விழைந்தனர். அவ்விழாவைக் கடற்கரையில் கொண்டாடவும் முடிவு செய்தனர்.

விழாவிற்காக வீடும் நாடும் அலங்கரிக்கப்பட்டன. மக்கள் பெருமகிழ்ச்சியோடு கடற்கரையில் குழுமினர். விழா மேடையில் தீவின் குடியரசுத் தலைவரும் அமைச்சரும் அமர்ந்திருந்தனர்.



அப்பொழுது, கடலில் தனியாக ஒரு படகு வருவதைக் கண்டனர். அதில் ஒருவர் மட்டும் வருவதையும், அவர் ஏதோ சைகை காட்டுவதையும் பார்த்தனர். குடியரசுத் தலைவர் உடனே அவரைக் காப்பாற்றும்படிப் பணித்தார். மக்கள் அவரது வேண்டுகோளை ஏற்றுப் படகிலிருந்தவரைக் கரை சேர்த்தனர். கரை சேர்ந்த மனிதரைக் கண்ட குடியரசுத் தலைவரும் அமைச்சரும் ஒரு கணம் அதிர்ச்சியுற்றனர். வந்தவரோ அவர்களைக் கண்டதும் திகைத்துப் பின் தலைகுனிந்து நின்றார். தீவின் மக்களுக்கோ நடப்பது ஒன்றும் புரியவில்லை. சற்று நேரம் அமைதி நிலவியது. படகில் வந்தவர் கடலை நோக்கி, நடந்தார். தலைவரும் அமைச்சரும் ஓடிச் சென்று அவரைத் தடுத்து நிறுத்தினார்கள்.

*படகில் வந்தவர் யார்? அவர் மீண்டும் கடலை நோக்கி ஏன் நடந்தார்? குடியரசுத் தலைவரும் அமைச்சரும் ஓடிச் சென்று ஏன் தடுத்தனர்? சிந்தியுங்கள்.*

நாடு உனக்கு என்ன செய்தது என்று கேட்காதே!
நாட்டிற்காக நீ என்ன செய்தாய் என்று நினைத்துப் பார்.
- பொன்மொழி



## செயல்கள்

- ★ காடுகள் வேகமாக அழிக்கப்பட்டு வருகின்றன. அப்படியானால் அதில் வாழும் உயிர்கள் எங்கே செல்லும்? அவற்றிற்கு ஏற்படும் பிரச்சினைகள் யாவை? சிந்தித்துக் கூறுக / எழுதுக.
- ★ அறிவியல் வளர்ச்சியால் போக்குவரத்துச் சாதனங்கள் பெருகியுள்ளன. அப்படியில்லாவிட்டால் நமது நிலைமை எப்படியிருக்கும்? சிந்தித்துக் கூறுக / எழுதுக.
- ★ உலகின் எந்த ஒரு மூலையில் நடக்கும் நிகழ்ச்சிகளையும் தொலைக்காட்சியில் பார்க்கலாம். அப்படியானால் நீ என்னென்ன நிகழ்ச்சிகளைப் பார்க்க விரும்புவாய்? கூறுக / எழுதுக.
- ★ நமது வாழ்விற்கு அடிப்படைத் தேவை நீர். அவ்வப்பொழுது மழை பெய்வதால் நீர்நிலைகள் நிரம்புகின்றன. அப்படியில்லாவிட்டால் என்ன நேரிடும்? சிந்திக்க / எழுதுக.
- ★ நும் பாடப்பகுதியில் அமைச்சரையும் அறிஞரையும் மன்னன் நாடு கடத்திவிட்டான். அப்படியானால் அந்நாட்டின் நிலை என்னவாகியிருக்கும்? சிந்தித்துக் கூறுக / எழுதுக.
- ★ மாணவர் வட்டமாக அமர்க. ஒருவர் ஒரு தொடர் கூறுக. அத்தொடரின் பொருளை ஒட்டி அடுத்தவர் ஒரு தொடர் கூறுக. இவ்வாறு தொடர்கள் கூறி ஒரு நிகழ்ச்சி / கதை உருவாக்குக.

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

| | |
|---|---|
| பூம்பொழில் | நலமாய் வளமாய் |
| வளம் கொழிக்கும் | பொன் கொழித்த |
| பெருமழை | மறுமொழி |
| காலை புலர்ந்தது | பழங்குடி |



## ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-

| | | | |
|---|---|---|---|
| பூரிப்பு | ____________ | செருக்கு | ____________ |
| புலர்ந்தது | ____________ | பஞ்சம் | ____________ |
| கொடூரம் | ____________ | கொழித்த | ____________ |
| அர்ப்பணித்தல் | ____________ | குழுமினர் | ____________ |
| கேளிர் | ____________ | புலர்ந்தது | ____________ |
| கைம்மாறு | ____________ | விழைந்தனர் | ____________ |



## இ) பிரித்து எழுதுக:-

செந்நெல் = ________ + ________

செய்வதறியாது = ________ + ________

குடியரசு = ________ + ________

நாகரிகமற்ற = ________ + ________

## ஈ) சேர்த்தெழுதுக:-

கருமை + இருள் = ____________

பழமை + குடி = ____________

மூன்று + போகம் = ____________

வழி + அறியாது = ____________

## உ) கோடிட்ட இடங்களைத் தகுந்த தொடர்களால் நிரப்புக:-



1. பூம்பொழில் நாடு வறுமையில் வாடக் காரணம் ____________________.

   அ) மன்னன் நாட்டைக் கவனிக்காதது.

   ஆ) அமைச்சர்கள் ஆலோசனை சொல்லாதது.

   இ) அந்நியர் படையெடுப்பு.

2. அமைச்சரும் அறிஞர்களும் நாடு கடத்தப்பட்டதற்குக் காரணம் ______________

அ) படைத் தளபதியின் ஆணை

ஆ) மக்களின் கோபம்

இ) மன்னனின் ஆணை

3. கப்பலில் தவித்தவர்களைக் காப்பாற்றியவர்கள் ______________

அ) பழங்குடி மக்கள்

ஆ) மன்னனின் போர் வீரர்கள்

இ) கப்பல் மாலுமி

4. தீவின் குடியரசு நாள் கொண்டாடப்பட்ட இடம் ______________

அ) தீவின் நடுப்பகுதி

ஆ) கப்பல்

இ) கடற்கரை

**ஊ) கீழ்க்காணும் குறிப்புகளைப் பயன்படுத்திச் சொற்றொடரை நிறைவு செய்க:-**

1. போக்குவரத்து வசதிகள் பெருகியதால் ______________ எளிதாகியது.
2. ஆற்றிலே வெள்ளம் வந்ததால் ______________ நிரம்பின.
3. பருவக் காற்று வீசாவிட்டால் ______________ இராது.
4. நீர் இல்லாததால் ______________ வாடின.
5. மின்சாரம் இல்லாவிட்டால் நமது ______________ தடைப்படும்.

**(வாழ்க்கை, ஏரிகள், பயிர்கள், பயணம், மழை)**

## எ) எடுத்துக்காட்டில் உள்ளவாறு தொடர்களை அமைத்துப் படிக்க / எழுதுக:-

**(எ-டு)** காடு - யானை

நான் காட்டுக்குச் சென்றால் யானையைப் பார்ப்பேன்.

1. கடிகாரம் - நேரம்
2. வீடு - தொலைக்காட்சி
3. பள்ளிக்கூடம் - பாடம்
4. சென்னை - வள்ளுவர் கோட்டம்

## ஏ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. பூம்பொழில் நாட்டின் சிறப்பை விளக்குக.
2. மக்கள் அரண்மனையை முற்றுகையிட்டது ஏன்?
3. மன்னன், தளபதிக்கு இட்ட ஆணை யாது?
4. அமைச்சரும் அறிஞர்களும் தீவை எவ்வாறு முன்னேற்றினர்?

# இலக்கணம்

## வினைமுற்று - எச்சம்

படித்தான், மேய்ந்தன - இச்சொற்களைப் படியுங்கள். இவற்றுள் வினைகள் பொருள் முடிவு பெற்று வந்துள்ளன. இங்ஙனம், பொருள் முடிவு பெற்று வரும் வினைச்சொல் **வினைமுற்று** எனப்படும். (எ-டு) எழுதினான், பாடினான்.

படித்து, படித்த, மேய்ந்து, மேய்ந்த - இச்சொற்களைப் படியுங்கள். இவற்றுள் வினைகள், பொருள் முடிவு பெறாமல் வந்துள்ளன. இங்ஙனம், பொருள் முடிவு பெறாத வினைச்சொல் **எச்ச வினை** எனப்படும்.

படித்த பையன், மேய்ந்த பசுக்கள் - இச்சொற்களைப் படியுங்கள்.

இவற்றுள் படித்த, மேய்ந்த என்னும் எச்ச வினைகள் பையன், பசுக்கள் என்ற பெயர்களைக் கொண்டு முடிந்துள்ளன. இங்ஙனம், எச்ச வினைகள் பெயரைக் கொண்டு முடிந்தால் அது **பெயரெச்சம்** எனப்படும்.

(எ-டு) பறந்த பறவை; பறக்கும் பறவை

படித்து எழுதினான்; மேய்ந்து வந்தன - இச்சொற்களைப் படியுங்கள்.

இவற்றுள் படித்து, மேய்ந்து என்னும் எச்ச வினைகள் எழுதினான், வந்தன என்னும் வினைச்சொற்களைக் கொண்டு முடிந்துள்ளன. இங்ஙனம், ஓர் எச்சவினை வினைச் சொல்லைக் கொண்டு முடிந்தால் அது **வினையெச்சம்** எனப்படும்.

(எ-டு) ஓடி விழுந்தான்; வந்து நின்றான்.

**வினாக்கள்:-**

1. வினைமுற்று என்றால் என்ன? எடுத்துக்காட்டுத் தருக.
2. பெயரெச்சம், வினையெச்சங்களை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
3. கீழ்க்காணும் சொற்றொடர்களிலிருந்து வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சங்களை எடுத்து எழுதுக.

அ) விரைந்து ஓடிய பாலன், கல் தடுக்கி விழுந்தான்.

ஆ) உம் பாடப் பகுதியில் வரும் வினைமுற்று, வினையெச்சம் பெயரெச்சங்களை எடுத்து எழுதுக.

| வினைமுற்று | பெயரெச்சம் | வினையெச்சம் |
|---|---|---|
| | | |

# 17 செந்தமிழ்க் களஞ்சியம் செல்வக் களஞ்சியமே!



அன்புக் குழந்தைகளே! மேசைமேல் வைத்திருக்கும் புத்தகங்களைப் பாருங்கள். இவைதாம், 'குழந்தைகள் கலைக்களஞ்சியங்கள்'. நீங்களாகவே இந்தப் புத்தகங்களைப் படிக்கலாம். புதிய செய்திகளை அறிந்து கொள்ளலாம். இந்நூலை நீங்கள் எவ்வாறு பயன்படுத்துவது என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?



'களஞ்சியம்' என்பது தானியங்களைச் சேமித்து வைக்கும் இடமாகும். குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்குத் தேவையான பல செய்திகளைச் சேகரித்து வைத்துள்ள நூலே **'குழந்தைகள் கலைக் களஞ்சியம்'**. இதில் சொற்கள் அகர வரிசைப்படி அமைக்கப்பட்டிருக்கும். சொல்லுக்குரிய பொருள், பட விளக்கத்துடன் கொடுக்கப்பட்டிருக்கும். இது பத்துத் தொகுதிகளைக் கொண்டது.

### சொல் - பொருள் அறியும் முறை :

பத்துத் தொகுதிகளிலும் கொடுக்கப்பட்டுள்ள 'சொல் - பொருள்' அகராதிப் பட்டியலைப் பத்தாம் தொகுதியின் கடைசிப் பக்கத்தில் காணலாம். அதில், பொருள் அறிய

---

***திறன் :*** *தானே கற்றல். குழந்தைகள் கலைக்களஞ்சியத்தைப் பயன்படுத்தும் திறன்.*

விரும்பும் சொல் - தொகுதி எண் - பக்க எண் ஆகியவை கொடுக்கப்பட்டிருக்கும்.

எடுத்துக்காட்டாக - ஆடை அணிகள் 1/43

இதன் விளக்கம் : 'ஆடை அணிகலன்' பற்றித் தெரிந்து கொள்ளத் தொகுதி 1இல் பக்கம் 43இல் பார்க்கவும் என்று நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

இனி, நீங்களே கலைக் களஞ்சியத்தைப் பார்த்துப் பல தகவல்களை அறியலாமே!

**ஆடை அணிகள்** : மிகப் பழங்காலத்தில் வாழ்ந்த நாகரிகமற்ற மனிதன் விலங்குகளின் தோலையும், பறவைகளின் இறகுகளையும், இலைதழைகளையும் ஆடையாக அணிந்தான். நாகரிகம் வளர வளரத்தான் பருத்தி, பட்டு, உரோமம் இவற்றைக் கொண்டு ஆடைகள் நெய்யப்பட்டன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டில் பால் ஆவியைப் போன்ற அவ்வளவு மெல்லிய ஆடைகளும், பாம்புத்தோல் போன்ற பல நிறங்கள் கொண்ட உடைகளும் நெய்யப்பட்டன.

உலகத்தில் இடத்துக்கிடம் தட்பவெப்ப நிலைகள் மாறு படுகின்றன. அவற்றுக்கேற்ப ஆடை வகைகளும் மாறுபட்டுக் காணப்படுகின்றன. பல நாட்டினர் உடுக்கும் பல வகையான



எஸ்கிமோ



இங்கிலாந்து



பிரான்ஸ்



ஜெர்மனி

ஆடைகளை நீங்கள் படத்தில் பார்க்கலாம். எஸ்கிமோக்கள் வடதுருவக் குளிரைத் தாங்கிக் கொள்ள வேண்டும்.

அதற்காக அவர்கள் உரோமம் அடர்ந்த, தடிப்பான தோல் ஆடைகளை உடுப்பார்கள். அரேபியாவில் வெயில் மிகவும் அதிகம். மணல் சூறாவளிகள் சுழன்றடிக்கும். அங்கு வாழும் மக்கள் அடுக்கடுக்கான மெல்லிய ஆடையால் தம் உடல் முழுவதையும் மூடிக் கொள்ளுவார்கள்.


ஜப்பான்


எகிப்து


ஹவாய்


அசாம்

நாகரிக மக்கள் பெரும்பாலும் சமதட்ப வெப்ப நாடுகளில்தான் வாழ்கிறார்கள். அவர்கள் குளிர்காலத்தில் கம்பள ஆடைகளையும், கோடை காலத்தில் பருத்தி ஆடைகளையும் அணிவார்கள். விஞ்ஞான முறைகளைக் கையாண்டு இப்போது 'நைலான்' 'டெரிலீன்' போன்ற ஆடைகள் செய்யப்படுவது உங்களுக்குத் தெரியும்.


மகாராஷ்டிரம்


பஞ்சாப்


தமிழ்நாடு


ராஜஸ்தான்

உலகில் அணி வகைகளை விரும்பாத மக்களே இல்லை என்று கூறலாம். பழங்காலத்து மக்கள் இரும்பாலும் வெண்கலத்தாலும் அணிகள் செய்து தம்மை அலங்கரித்துக் கொண்டனர். பிறகு வெள்ளியாலும் தங்கத்தாலும் நகைகள் செய்து அணிந்தார்கள். பழங்காலத்துத் தமிழ்ப் பெண்கள் சங்கு வளையல்களையும் அணிந்திருந்தார்களாம்.

நாட்டுக்கு நாடு அணிகளும் வேறுபடுகின்றன. ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் பலவகை நகைகளை அணிகின்றார்கள். காலப்போக்கில் நகை வகைகளும் மாறி வந்துள்ளன. பழந் தமிழ்ப் பெண்கள் காதுகளிலும், கழுத்திலும், கைகளிலும், கால்களிலும் அணிந்துவந்த நகைகள் பலவற்றை இக்காலத்துப் பெண்கள் அணிவதில்லை. இப்போது ஆண்கள் கடுக்கன், கைக்காப்புகள் அணிவது இல்லை. பொன்னாலான அணிகளையும், கல்லிழைத்த அணிகளையுமே இப்போது பெண்கள் பெரிதும் விரும்புகின்றனர்.




நாட்டு வரலாறுகள், இலக்கியங்கள், ஓவியங்கள், சிற்பங்கள் இவை எல்லாம் பழங்கால மக்களின் ஆடை அணிகளைப் பற்றித் தெரிந்துகொள்ள உதவுகின்றன. ஹரப்பா, மொகஞ்சதாரோ என்ற இடங்களில் சில சிற்பங்கள் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியர் எத்தகைய ஆடை அணிகளைப் பயன்படுத்தி வந்தனர் என்பதை இவற்றால் நாம் தெரிந்துகொள்ளலாம். இந்தியாவில் கோயில்களிலும், குகைக் கோயில்களிலும், சித்திரங்களும் சிற்பங்களும் ஏராளமாக உள்ளன. இவற்றைக் கொண்டு பல்லவர்கள், சோழர்கள், விஜயநகர அரசர்கள் காலத்து ஆடை அணிகளைப்பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

நவமணிகள் இழைத்த நகைகளுக்கு உலகெங்கும் மதிப்பு அதிகம். கோயில்களில் தெய்வ உருவச் சிலைகளுக்கு விலை

உயர்ந்த நவமணிகள் பதித்த அணிகள் பூட்டுவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

ஒரு நாட்டின் நாகரிகம், பண்பாடு, செல்வ வளம், அறிவு நுட்பம், அழகு உணர்வு இவை அனைத்தையும் அந்நாட்டினர் அணிந்து வந்துள்ள ஆடை அணிகளால் அறியலாம்.

> ஒழுக்கம், நாணயம், நேர்மை, பிறருக்கு உதவுதல், ஆகிய பண்புகளைப் பின்பற்றுதல் மாணவர்களை உயர்ந்தவராக்கும்.
>
> - பெரியார்



### செயல்கள்

★ 'குழந்தைகள் கலைக் களஞ்சிய'த்தைப் பயன்படுத்திப் பின்வரும் பொருள்கள் பற்றி கூறுக / எழுதுக.

*கிளி, யானை, திமிங்கலம், மாமல்லபுரம்*

★ *நீ விரும்பும் படங்களைச் சேகரிக்க. அகர வரிசைப்படி ஒட்டுக. அதன் விவரங்களை எழுதுக. பட அகராதி தயார் செய்க.*

★ *தொலைக்காட்சி, வானொலி பற்றிக் கலைக் களஞ்சியத்தில் கூறப்பட்டுள்ள விவரங்களைப் படித்து அறிக. அவை பற்றிப் பத்து வரிகள் எழுதுக.*

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

ஒரு நாட்டின் நாகரிகம், பண்பாடு, செல்வ வளம், அறிவு நுட்பம், அழகு உணர்வு இவை அனைத்தையும் அந்நாட்டினர் அணிந்து வந்துள்ள ஆடை அணிகளால் அறியலாம்.

## ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-



| | | | |
|---|---|---|---|
| சித்திரம் | ________ | அணிகலன் | ________ |
| தட்பவெப்பம் | ________ | சூறாவளி | ________ |
| பொன் | ________ | உரோமம் | ________ |



## இ) பிரித்து எழுதுக:-

இரண்டாயிரம் = ________ + ________

கல்லிழைத்த = ________ + ________

இக்காலத்து = ________ + ________

நாகரிகமற்ற = ________ + ________

அந்நாட்டினர் = ________ + ________

## ஈ) சேர்த்து எழுதுக:-

தட்பம் + வெப்பம் = ________

கம்பளம் + ஆடை = ________

ஐந்து + ஆயிரம் = ________

உலகம் + எங்கும் = ________

பழமை + காலம் = ________



## உ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. குழந்தைகள் கலைக்களஞ்சியம் எனப்படுவது யாது?
2. அணிகலன்கள் குறித்துக் 'கலைக் களஞ்சியம்' கூறும் தகவல்களை எழுதுக.
3. பழங்கால மக்களின் ஆடை அணிகளைப் பற்றித் தெரிந்துகொள்ள உதவுவன யாவை?
4. ஒரு நாட்டினர் அணிந்து வந்துள்ள ஆடை அணிகளால் நாம் அறிவன யாவை?

# 18 உங்களால் முடியும்



**கபிலன்** : அம்மா! அம்மா! அங்கே பாருங்கள்! ஒரு நாய்க்குட்டி கத்திக் கொண்டிருக்கிறது.

**அம்மா** : கபிலா! பாவம், இந்த நாய்க்குட்டிக்குக் காலில் அடிபட்டு இரத்தம் கொட்டுகிறது.

**கபிலன்** : அம்மா! இதை யாரோ கல்லால் அடித்திருப்பார்கள் போலிருக்கிறதே!

**அம்மா** : அடிபட்ட இதனுடைய வலியும் வேதனையும் அடித்தவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது? இரக்கமற்ற இத்தகைய கொடுஞ்செயல்களைச் செய்வது பாவம் அல்லவா?

**கபிலன்** : ஆம், அம்மா! ஒருமுறை என் நண்பன் சின்னப்பன் விளையாட்டாக ஒரு நாயைக் கல்லால் அடிக்கப் போனான். நான் அவனைத் தடுத்து,'இது தவறான செயல். நாயும் நம்மைப் போல ஓர் உயிர்தான்', என்று கூறித் திருத்தினேன்.

**அம்மா** : நல்லது செய்தாய்! இப்பொழுது நாம் இந்த நாய்க்குட்டிக்கு நம்மாலான உதவியைச் செய்வோம்!

**கபிலன்** : அம்மா! எங்கள் பள்ளிக்கு அருகில்தான் 'அரசு கால்நடை மருத்துவமனை' உள்ளது. நான் இதை அங்குக் கொண்டு சென்று சிகிச்சை செய்து வரட்டுமா?

**அம்மா** : நல்லது கபிலா! அவ்வாறே செய். நீ பாதுகாப்பாகச் சென்று விரைவில் வீட்டிற்குத் திரும்பி விடு.

**கபிலன்** : நன்றி அம்மா!

(கபிலன் நாய்க்குட்டியை எடுத்துக் கொண்டு கால்நடை மருத்துவ மனைகருள் செல்கிறான்.)

---

*திறன் : மொழியைப் பயன்படுத்துதல். சூழலுக்குத் தக்கவாறு முறைசார்ந்த பேச்சு (அ) பேச்சு வழக்கு மொழியைப் பயன்படுத்துதல்.*

**கபிலன்** : (மருத்துவரிடம்) ஐயா! வணக்கம்! உள்ளே வரலாமா?

**மருத்துவர்** : வா! தம்பி நாய்க்குட்டிக்கு என்ன?

**கபிலன்** : ஐயா! யாரோ இதைக் கல்லால் அடித்திருக்கிறார்கள். துடிதுடித்துக் கத்துகிறது. தயவுசெய்து இதற்கு மருத்துவம் செய்து உதவ வேண்டுகிறேன்.

**மருத்துவர்** : நாய்க்குட்டிக்குக் காலில் பலமாக அடிபட்டுள்ளது. தம்பி நாய்க்குட்டியைக் கண்டபடி தெருவில் விடலாமா?



**கபிலன்** : ஐயா! மன்னியுங்கள். இது எங்களுடைய நாய்க் குட்டி அன்று. இது அடிபட்டுத் தெருவில் கத்திக் கொண்டு இருந்தது. இதற்கு உதவி செய்யவே இங்குக் கொண்டு வந்தேன்.

**மருத்துவர்** : அப்படியா! மிக்க மகிழ்ச்சி. இச்சிறிய வயதில் உன்னிடத்தில் இப்படிப்பட்ட நற்பண்புகள் இருப்பது கண்டு பாராட்டுகிறேன். நீ எப்பள்ளியில் படிக்கிறாய்?

**கபிலன்** : நன்றி ஐயா! நான் இவ்வூரில் உள்ள ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளியில் ஐந்தாம் வகுப்புப் படிக்கிறேன்.

**மருத்துவர்** : தம்பி! நன்றாகப் படி. அத்துடன் பண்பையும் ஒழுக்கத்தையும் வளர்த்துக்கொள். பிறந்த வீட்டிற்கும், நாட்டிற்கும், படிக்கும் பள்ளிக்கும் நற்புகழைச் சேர். இது என் அன்பான அறிவுரை. இதோ! நாய்க்குட்டிக்கு மருந்து வைத்துக் கட்டிவிட்டேன். இப்பொழுது இந்நாய்க்குட்டியை வீதியிலேயே விட்டுவிடப் போகின்றாயா?

**கபிலன்** : இல்லை ஐயா! இதை எங்கள் வீட்டிற்குக் கொண்டு சென்று வளர்க்கப் போகின்றேன்.

மருத்துவர்: நன்று தம்பி! நீ சொல்வதைக் கேட்க மகிழ்ச்சியாய் இருக்கிறது. உன்னைப் போல நாட்டில் அனைவரும் இருந்துவிட்டால் உயிர்களுக்குத் துன்பம் என்பதே இராது. உன்னைப் பெற்று வளர்க்கும் பெற்றோர்களையும், உனக்குக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர்களையும் பாராட்டுகிறேன்.

கபிலன் : நன்றி ஐயா! நாய்க்குட்டியை வீட்டிற்கு எடுத்துச் செல்லலாமா?

மருத்துவர்: நல்லது தம்பி! பாதுகாப்பாகக் கொண்டு செல். (கபிலன் நாய்க்குட்டியுடன் வீட்டை அடைகிறான். வாணி விளையாடிக் கொண்டிருக்கிறாள். வாணியின் தாத்தா அங்கு வருகிறார்.)

தாத்தா : வாணி! நம் தெருவில் குப்பைகூளங்கள் அதிகமாக உள்ளன; சாக்கடைகள் நிரம்பியுள்ளன. இவற்றைத் துப்புரவு செய்ய வேண்டி, ஊராட்சி மன்றத் தலைவருக்கு விண்ணப்பம் எழுதி வைத்துள்ளேன். கபிலனுடன் ஊராட்சி மன்றத்திற்குச் சென்று விண்ணப்பத்தைக் கொடுத்து விட்டு வா.

வாணி : தாத்தா! சிறுவர்களாகிய நாங்கள் ஊராட்சி மன்ற அலுவலகம் சென்று விண்ணப்பத்தைத் தரலாமா?

தாத்தா : ஓ! தாராளமாகக் கொடுக்கலாம். நீங்களும் இது போன்ற அலுவலகங்களுக்குச் சென்றால்தானே நடைமுறைகளை அறிந்துகொள்ள முடியும்!

கபிலன் : சரி, தாத்தா! அக்கடிதத்தைக் கொடுங்கள். மன்றத் தலைவர் அவர்களிடம் சேர்த்துவிடுகிறோம்.

தாத்தா : நல்லது கபிலா! இதோ விண்ணப்பம். எடுத்துச் செல்லுங்கள்.

வாணி : தாத்தா! உறையில் விண்ணப்பத்தைப் போட்டு முகவரியை எழுதித் தாருங்கள்.

தாத்தா : வாணி! நன்றியம்மா, மறந்தே போனேன். நல்ல வேளை! நினைவூட்டினாய்.

**வாணி** : என்ன தாத்தா! நீங்கள் பெரியவர். எனக்கு நன்றி கூறலாமா?

**தாத்தா** : வாணி! பெரியவரோ சிறியவரோ, நாம் பெறும் உதவிக்கு நன்றி கூற வேண்டும்.

**வாணி** : நல்லது தாத்தா! நாங்கள் சென்று வருகின்றோம்.

(வாணியும் கபிலனும் ஊராட்சி மன்ற அலுவலகத்தில்)

**வாணியும் , கபிலனும்** : வணக்கம் அம்மா!



**தலைவர்** : வாருங்கள் பிள்ளைகளே! வணக்கம்! உட்காருங்கள்.

**வாணியும் , கபிலனும்** : நன்றி அம்மா!

**தலைவர்** : என்னை எதற்காகப் பார்க்க வந்தீர்கள்?

**கபிலன்** : அம்மா! எங்கள் தாத்தா உங்களிடம் இவ்விண்ணப்பத்தைக் கொடுத்துவரச் சொன்னார்.

**தலைவர்** : (விண்ணப்பத்தை வாங்கிப் படித்து) நல்லது பிள்ளைகளே! உடனே ஏற்பாடு செய்கிறேன். உங்கள் தாத்தாவின் விழிப்புணர்வையும் சேவையையும் பாராட்டுகிறேன்.

**வாணி** : அம்மா! சிறுவர்களாகிய எங்களை இன்முகத்தோடு வரவேற்றுப் பதில் அளித்த உங்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**தலைவர்** : மிக்க மகிழ்ச்சி. வாழ்த்துகள்! சென்று வாருங்கள்.

> பணிவு உடையவனாகவும், இனிய சொற்களைப் பேசுபவனாகவும் இருத்தலே ஒருவனுக்கு வெற்றியைத் தரும் அணிகலன்களாகும்.
>
> - குறள்மொழி



### செயல்கள்

- *நண்பனின் வீட்டிற்கு முதல்முறையாகச் சென்றுள்ளாய் நீ. அங்குள்ள பெரியோர்கள் மற்றும் நண்பனின் உறவினர்களுடன் எவ்வாறு உரையாடுவாய் - கற்பனை செய்து உரையாடுக - எழுதுக.*
- *பள்ளி மாணவமன்ற விழாவிற்குச் சிறப்பு விருந்தினர் ஒருவர் வருகை தந்துள்ளார். நீ மாணவர் மன்றச் செயலர். அவரை எவ்வாறு வரவேற்று உபசரிப்பாய் எனக் கூறுக / எழுதுக.*
- *நியாய விலைக் கடையில் பொருள்கள் வாங்கச் செல்கின்றாய். விற்பனையாளரிடம் பொருள் வாங்க எவ்வாறு உரையாடுவாய் எனக் கூறுக / எழுதுக.*
- *உன் வீட்டில் நடக்கும் புதுமனை புகுவிழாவிற்கு, உன் நண்பனை அவனுடைய பெற்றோருடன் தொலைபேசியில் பேசி அழைக்க வேண்டும். எவ்வாறு தொலைபேசியில் உரையாடுவாய். பேசுக / எழுதுக.*
- *கபிலன் கால்நடை மருத்துவரிடமும், வாணியும் கபிலனும் ஊராட்சி மன்றத் தலைவியிடமும் உரையாடியதை நீ உன் நண்பனுடன் கற்பனையாக உரையாடிப் பழகு.*

## பயிற்சிகள்



### அ) படித்துப் பழகுக:-

பிறந்த வீட்டிற்கும் நாட்டிற்கும் படிக்கும் பள்ளிக்கும் நற்புகழைச் சேர்.

### ஆ) அகராதியைப் பார்த்துப் பொருள் கூறுக / எழுதுக:-



1. பண்பு ________  4. சேவை ________
2. விண்ணப்பம் ________  5. அருகில் ________
3. விழிப்புணர்வு ________  6. இரக்கம் ________

### இ) பிரித்து எழுதுக:-



கொடுஞ்செயல் = ________ + ________

விழிப்புணர்வு = ________ + ________

இன்முகம் = ________ + ________

நற்பண்புகள் = ________ + ________

### ஈ) விடுபட்ட இடத்தைச் சொற்களால் நிரப்புக:-



1. (மருத்துவரிடம்) ஐயா! ____________ உள்ளே வரலாமா?
2. ____________ ஐயா! நான் இவ்வூரில் உள்ள ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளியில் ஐந்தாம் வகுப்புப் படிக்கிறேன்.
3. ____________ இதற்கு மருத்துவம் செய்து உதவ வேண்டுகிறேன்.
4. என்ன, தாத்தா! நீங்கள் பெரியவர் எனக்கு ____________ கூறலாமா!
5. உங்கள் தாத்தாவின் விழிப்புணர்வையும், ____________ பாராட்டுகிறேன்.

உ) கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைத் தேர்ந்தெடுத்து எழுதுக:-

அன்புள்ள மாமாவிற்கு,

__________! அத்தை __________ இருக்கிறார்களா? என்னுடைய அன்பான __________ அவர்களுக்குச் சொல்லுங்கள். நீங்கள் அடுத்தமுறை வரும்பொழுது __________ எனக்குத் திருக்குறள் புத்தகம் கொண்டு வாருங்கள். சுந்தர் எனக்குப் பிறந்த நாள் வாழ்த்து அனுப்பியிருந்தான். அவனுக்கு நான் __________ தெரிவித்ததாகக் கூறுங்கள். தாத்தா பாட்டிக்கு என் __________ வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறேன்.

நாள் : __________ உங்கள் __________

**செந்தில்**

**(பணிவான, வணக்கம், வணக்கத்தை, நலமாக, தயவுசெய்து நன்றி, அன்புள்ள)**

ஊ) குடிநீர் வேண்டி ஊராட்சி மன்றத் தலைவருக்கு ஒரு விண்ணப்பம் எழுதுக. கீழ்க்காணும் சொற்களைத் தேவையான இடங்களில் பயன்படுத்துக:-

**(வணக்கம், நன்றி, தயவுசெய்து, அனுமதி தாருங்கள், வேண்டுகிறேன், பணிவான)**

எ) எடுத்துக்காட்டில் உள்ளவாறு தொடர்களைப் பணிவுத் தொடர்களாக மாற்றி எழுதுக.

**(எ-டு)**

அக்கா! என் எழுது கோலைத் தரப்போகிறாயா? இல்லையா?

அக்கா! தயவுசெய்து என் எழுதுகோலைக் கொடுங்கள்.

1. அம்மா! எனக்குப் பள்ளிக்கு நேரமாகி விட்டது. சாப்பாடு தயாரா?

2. மருத்துவரே! என் நாய்க்குட்டிக்குச் சீக்கிரம் கட்டுப் போடுங்கள்.

3. தாத்தா! என்ன வேண்டும்? உடனே சொல்லுங்கள்.

4. அம்மா... இந்தாங்க! இந்த விண்ணப்பத்தை எங்கள் தாத்தா உங்களிடம் கொடுக்கச் சொன்னார்.

## ஏ) வினாக்களுக்கு விடையளிக்க:-



1. தெருவில் அடிபட்டுக் கிடந்த நாய்க் குட்டிக்குக் கபிலன் செய்த உதவி யாது?

2. கபிலனுக்கு மருத்துவர் கூறிய அறிவுரைகளை எழுதுக?

3. வாணிக்கும் கபிலனுக்கும் தாத்தா என்ன வேலை கொடுத்தார்?

4. விண்ணப்பத்தைப் பெற்றுக் கொண்ட ஊராட்சி மன்றத் தலைவி என்ன கூறினார்?

## இலக்கணம்

### எழுவாய் - பயனிலை - செயப்படுபொருள்.

**அறிவழகன் திருக்குறளைப் படித்தான்**. இச்சொற்றொடரைப் படியுங்கள். இதில் திருக்குறளைப் படித்தது யார்? **அறிவழகன்**. ஒரு தொடரில் செயலைச் செய்பவர் எழுவாய். எனவே, இதில் அறிவழகன் என்பது எழுவாய். இவ்வாறு ஒரு தொடரில் யார்? எவன்? எவள்? எது? எவை? என்னும் வினாக்களுக்கு விடையாக வருவது **எழுவாய்** எனப்படும்.

இத்தொடரில் செயலை விளக்கும் சொல் **படித்தான்**. இங்ஙனம் ஒரு தொடரில் பொருளை முடித்து நிற்கும் சொல் **பயனிலை** எனப்படும். எனவே படித்தான் என்பது பயனிலை.

இத்தொடரில் எதைப் படித்தான்? என்னும் வினாவுக்கு விடையாக வருவது **திருக்குறள்** ஆகும். எனவே, திருக்குறள் என்பது **செயப்படுபொருளாகும்**. இங்ஙனம் ஒரு தொடரில் யாரை? எதை? எவற்றை? என்னும் வினாக்களுக்கு விடையாக அமைவது 'செயப்படுபொருள்' எனப்படும்.

**வினாக்கள்:-**

1. பின்வரும் சொற்றொடர்களிலிருந்து எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களை எடுத்து எழுதுக.
   1. கபிலன் மாம்பழம் தின்றான்.
   2. வாணி இலக்கணம் படித்தாள்.
   3. கபிலன் படம் வரைந்தான்.

| எழுவாய் | பயனிலை | செயப்படுபொருள் |
|---|---|---|
| | | |

# செய்யுட் பகுதி



## 1. வாழ்த்து

**வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி**
**ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்**
**கோனாகி யான்எனதென்(று) அவரவரைக் கூத்தாட்டு**
**வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே!**

– மாணிக்கவாசகர்

**கடவுள் வாழ்த்து :** கடவுளின் இயல்புகளையும் சிறப்புகளையும் புகழ்ந்து பாடுதல் கடவுள் வாழ்த்து எனப்படும்.

**ஆசிரியர் குறிப்பு :** மாணிக்கவாசகர் மதுரைக்கு அருகிலுள்ள திருவாதவூரில் பிறந்தார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் வாதவூரன். காலம் கி.பி.மூன்றாம் நூற்றாண்டு. பாண்டிய மன்னன் அவையில் அமைச்சராகப் பணி புரிந்தார்.

### மொழிப் பயிற்சி

**அ) சொல்லும் பொருளும் அறிக**

*வான் - வானம் ; வளி - காற்று ; ஊன் - உடல் ; கோன் - தலைவன்*

(வானம், மண், காற்று, நெருப்பு, உடல், உயிர் எல்லாம் நீயே! தோன்றி வருகின்ற உண்மை நீ! தோன்றாமலிருக்கின்ற இன்மையும் நீ! யான், எனது என்று ஒவ்வொருவரையும் மயங்கச் செய்து ஆட்டுவிப்பவனும் நீ! தலைவனும் நீ! உனது அளவிடற்கரிய பெருநிலையை எப்படிப் போற்றிப் புகழ்வேன்!)

**ஆ) பிரித்தறிக:-**

வானாகி = வான் + ஆகி ; வளியாகி = வளி + ஆகி;
கோனாகி = கோன் + ஆகி ; கூத்தாட்டுவான் = கூத்து + ஆட்டுவான்.

**இ) வினாக்களுக்கு விடையளிக்க :**

1) மாணிக்கவாசகர் இறைவனை எவ்வாறு வாழ்த்துகிறார்? கூறுக / எழுதுக.
2) இப்பாடலில் இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எடுத்து எழுதுக.

# 2. அறவுரைப் பகுதி



## 1. திருக்குறள்

### 1. செய்ந்நன்றி அறிதல்

1) செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

2) காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

3) பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது.

4) தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

5) எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு.

### 2. அடக்கம் உடைமை

6) காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனின் ஊங்(கு) இல்லை உயிர்க்கு.

7) நிலையின் திரியா(து) அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

8) எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

9) ஒருமையுள் ஆமைபோல் ஐந்(து) அடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்(பு) உடைத்து.

10) யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்இழுக்குப் பட்டு.

## 3. பொறையுடைமை

11) அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

12) பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.

13) ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.

14) ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்.

15) மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.

## 4. அறிவு உடைமை

16) சென்ற இடத்தால் செலவிடா தீ(து)ஒரீஇ
நன்றின்பால் உய்ப்ப(து) அறிவு.

17) எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப(து) அறிவு.

18) அறிவுடையார் ஆவ(து) அறிவார் அறிவிலார்
அஃ(து)அறி கல்லா தவர்.

19) அஞ்சுவ(து) அஞ்சாமை பேதைமை அஞ்சுவ(து)
அஞ்சல் அறிவார் தொழில்.

20) அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

- திருவள்ளுவர்

## நூல்குறிப்பு :

'திரு' என்னும் சொல்லுக்கு 'மேன்மை', 'அழகு', 'தெய்வத்தன்மை' என்பது பொருள். 'குறள்' என்றால் குறுகிய அடிகளை உடைய பாடல்' என்பது பொருள். எனவே, 'மேன்மை பொருந்திய 'குறள்' எனச் சிறப்பித்து வழங்கப்படுகின்றது. திருக்குறள் அறம், பொருள், இன்பம் என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. 133 அதிகாரங்களைக் கொண்டது. அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் 1330 குறட்பாக்களைக் கொண்டது. இது 'உலகப் பொதுமறை' எனப் போற்றப்படுகிறது.

## ஆசிரியர் குறிப்பு

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர். இவர் பிறந்த ஆண்டு பற்றிய செய்திகள் கிடைக்கப் பெறவில்லை. ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்நாட்டில் சென்னை மயிலாப்பூரில் வாழ்ந்து மறைந்தவர் என அறிஞர் கூறுவர். இவரைத் 'தெய்வப் புலவர்' 'பொய்யில் புலவர்', எனப் பாராட்டிக் கூறுவர்.

## மொழிப் பயிற்சி

### அ) சொல்லும் பொருளும் அறிக :-

1) வையகம்- மண்ணுலகு; வானகம் - விண்ணுலகு. (நாம் முன்பு ஒரு உதவியையும் செய்யாமல் இருக்க, பிறர் நமக்குச் செய்யக்கூடிய உதவிக்கு, இம்மண்ணுலகையும் விண்ணுலகையும் கொடுத்தாலும் ஈடு ஆகாது.)

2) ஞாலம் - உலகம்; மாண - மிகவும். (உரிய காலத்தில் செய்த உதவி சிறிதளவாக இருந்தாலும், அதன் பயனை ஆராய்ந்தால் அது உலகைவிடப் பெரியதாகும்.)

3) தூக்கார் - ஆராயாமல்; (எதிர்பாராமல்), தூக்கின் - ஆராய்ந்தால். (பயனை எதிர்பாராமல் செய்த உதவியின் தன்மையை ஆராய்ந்தால், அது கடலைவிடப் பெரியதாகும்.)

4) தினைத்துணை - மிகச் சிறிய அளவு; பனைத்துணை - மிகப் பெரிய அளவு. (தினை அளவு மிகச் சிறிய உதவி செய்தாலும் அதன் பயனை உணர்ந்தவர்கள் பனை அளவு மிகப் பெரியதாகக் கருதுவர்.)

5) எழுபிறப்பு - ஏழு பிறவி; உள்ளுவர் - நினைப்பர்; விழுமம் - துன்பம்; துடைத்தவர் - நீக்கியவர். (பெரியோர், தம் துன்பம் நீக்கியவரின் நட்பைப் பிறவிதோறும் நினைப்பர்.)

6) ஆக்கம் - செல்வம்; அதனின் ஊங்கு - அதனைவிட (அடக்கத்தைக் காக்க வேண்டிய பொருளாக எண்ணிக் காக்க வேண்டும். மக்களுக்கு அதைக் காட்டிலும் சிறந்த செல்வம் வேறு இல்லை.)

7) திரியாது - மாறாது; அடங்கியான் - அடக்கமுடையவன். (தன் நிலையில் மாறுபடாமல் அடங்கி நடப்பவன் தோற்றம் மலையைக் காட்டிலும் பெரிதாகும்.)

8) (நன்று)ஆம் - நன்மையானதாகும்; தகைத்து - சிறப்பான தன்மை உடையது. (பணிதல் அனைவருக்கும் நல்லது. செல்வர்க்கு, அது மற்றொரு செல்வம் ஆகும் தன்மை உடையது.)

9) ஐந்து - ஐம்பொறிகள்; எழுமை - ஏழு பிறப்பு; ஏமாப்பு - பாதுகாப்பு. (ஆமைபோல் ஒருவன் ஒரு பிறவியில் ஐம்பொறிகளையும் அடக்கி வாழ்ந்தால் அது ஏழு பிறவிகளிலும் பாதுகாப்பாக இருக்கும்.)

10) யா - எவற்றை; சோகாப்பர் - துன்பப்படுவர் (எவற்றைக் காக்காவிட்டாலும் நாவை அடக்கிப் பேச வேண்டும். இல்லையெனில் சொற்குற்றத்திற்கு ஆளாகித் துன்பப்படுவர்.)

11) அகழ்வார் - தோண்டுபவர், இகழ்வார் - அவமதிப்பவர். (தன்னைத் தோண்டுபவரையும் பொறுத்துக் கொள்ளும் நிலம்போலத் தம்மை அவமதிப்பவரையும் பொறுத்துக் கொள்ளுதல் உயர்ந்த பண்பாகும்.)

12) இறப்பு - தீங்கு. (பிறர் செய்த தீங்கைப் பொறுத்தல் நன்று. அத்தீங்கை அன்றே மறத்தல் அதனினும் நன்று.)

13) ஒறுத்தார் - தீங்கு செய்தவர்; ஒன்றாக - ஒரு பொருளாக; வையாரே - மதிக்கமாட்டார். (தமக்குத் தீங்கு செய்தவரைப்

பொறுக்காது தண்டித்தவரை உலகத்தார் ஒரு பொருளாக மதிக்கமாட்டார்கள். பொறுத்தவரைப் பொன்போல் மனத்தில் வைத்து மதிப்பர்.)

14) ஒறுத்தார் - தண்டித்தவர்; பொன்றும் துணை - அழியும் வரை. (தீங்கு செய்தவரைத் தண்டித்தவர்க்கு அன்று ஒரு நாள் மட்டுமே இன்பம்; ஆனால் அத்தீங்கைப் பொறுத்துக் கொண்டவர்க்கு உலகம் அழியும் வரை புகழ் உண்டாகும்.)

15) மிகுதியான் - செருக்கினால்; மிக்கவை - தீங்கானவற்றை; தகுதியான் - பொறுமையால். (செருக்கினால் தீங்கு செய்பவர் களையும் நாம் நம் பொறுமையால் வெற்றி கொள்ள வேண்டும்.)

16) தீதுஒரீஇ - தீமையிலிருந்து நீக்கி; உய்ப்பது - செலுத்துவது. (மனத்தைத் தீமையான வழிகளில் செல்லவிடாமல் தடுத்து, நல்வழியில் செலுத்துவது அறிவு ஆகும்.)

17) மெய்ப்பொருள் - உண்மைப்பொருள். (எப்பொருளை யார் சொல்லக் கேட்டாலும் அதன் உண்மைப் பொருளைக் காண்பதே அறிவுடைமையாகும்.)

18) ஆவது - நடக்கவிருப்பது; அஃது அறிகல்லாதவர் - அதனை அறியாதவர். (அறிவுடையவர் நடக்கவிருப்பதை அறிவர். அறிவில்லாதவர்கள் அதனை அறிய மாட்டார்கள்.)

19) பேதைமை - அறியாமை; அஞ்சல் - பயப்படுதல். (அஞ்ச வேண்டியவற்றுக்கு அஞ்சாதிருத்தல் அறியாமையாகும். அதற்கு அஞ்சுவது அறிவுடையார் செயலாகும்.)

20) என்னுடையரேனும் - எதைப் பெற்றிருந்தாலும்; இலர் - இல்லாதவர். (அறிவுடையவர் எது இல்லாதிருந்தாலும் எல்லாம் உடையவர் ஆவர். அறிவில்லாதவர் எல்லாம் பெற்றிருந்தாலும் ஒன்றும் இல்லாதவரே ஆவர்.)

## ஆ) பிரித்தறிக:-

1. வானகம் = வான் + அகம்
   சிறிதெனினும் = சிறிது + எனினும்

2. ஐந்தடக்கல் = ஐந்து + அடக்கல்
நாகாக்க = நா + காக்க
சொல்லிழுக்கு = சொல் + இழுக்கு

3. செலவிடாது = செல்ல + விடாது
மெய்ப்பொருள் = மெய் + பொருள்
அறிவுடையார் = அறிவு + உடையார்
அறிவிலார் = அறிவு + இலார்

### இ) எதிர்ச்சொல் அறிக :-

மறத்தல் x நினைத்தல்
நன்று x தீது
இன்பம் x துன்பம்
மிகுதி x தகுதி

### ஈ) வினாக்களுக்கு விடையளிக்க:-

I. 1. செய்யாமல் செய்த உதவிக்கு ஈடாகாதது எது?
2. இவ்வுலகைவிடப் பெரியது எது?
3. ஏழேழு பிறவிகளிலும் நினைக்கக்கூடியது எது?

II. 1. மலையைக் காட்டிலும் பெரியது எது?
2. மனிதனுக்கு ஏழு பிறவிகளிலும் பாதுகாப்பானது எது?
3. நாவை அடக்கிப் பேசாவிட்டால் என்ன ஏற்படும்?

III. 1. எதை மறத்தல் நன்று என வள்ளுவர் கூறுகிறார்?
2. பிறரது தீமையைப் பொறுத்துக் கொண்டவரின் புகழ் எதுவரை நிலைத்திருக்கும்?
3. பொறுமைக்கு எடுத்துக்காட்டாக எதனை வள்ளுவர் கூறுகிறார்?

IV. 1. எது அறிவுடைமையாகும் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார்?
2. அறிவில்லாதவர்கள் எதனை அறிய மாட்டார்கள்?
3. பேதைமை என்று வள்ளுவர் எதனைக் கூறுகிறார்?

# 2. நன்னெறி



1. உள்ளம் கவர்ந்(து)எழுந்(து) ஓங்கு சினம்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க - வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு.

2) இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே - பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா(து) அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்கும் கடல்.

3) பெரியவர்தம் நோய்போல் பிறர்நோய்கண்(டு) உள்ளம்
எரியின் இழுதாவர் என்க - தெரியிழாய்!
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

4) கைம்மா(று) உகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாம்செய்வர் - அம்மா
முளைக்கும் எயிறு முதிர்சுவை நாவிற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று.

- சிவப்பிரகாசர்

**ஆசிரியர் குறிப்பு** : சிவப்பிரகாசர் கி.பி.பதினேழாம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தில் பிறந்தவர். தந்தையார் திரு.குமாரசாமி தேசிகர். சிவப்பிரகாசர், சோணசைல மாலை, நால்வர் நான்மணி மாலை, பிரபுலிங்க லீலை, சீகாளத்திப் புராணம் முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

இவரால் இயற்றப்பட்ட 'நன்னெறி' என்னும் வெண்பாப் பாடல்களிலிருந்து சில பாடல்கள் பாடமாகத் தரப்பட்டுள்ளன.

## மொழிப் பயிற்சி

### அ) சொல்லும் பொருளும் அறிக:-

1) கவர்ந்து - தன் வசப்படுத்தி; எழுந்து - வெளிப்பட்டு; ஓங்கு - மிகுதியாக; தடங்கரை - பெரியகரை; அரிதோ - அருமையோ.

(திரண்டு வரும் வெள்ளத்தைக் கரை அமைத்துத் தடுத்தல் அரிதா? அக்கரையைப் பெயர்த்து வெள்ளத்தை வெளிவிடுதல் அரிதா? எனவே, மனத்தில் எழும் மிக்க சினத்தை அடக்கிக் காத்துக் கொள்ளும் குணமே உயர் குணமாகும்.)

2) அதிர் - ஒலித்தல்; அழற்கதிர் - வெப்பமிக்க சூரியன்; தண்ணென்கதிர் - குளிர்ச்சியான சந்திரன்; பொங்கும் - மிகுந்து எழும். (வெம்மையான சூரியனால் கடல்நீர் பொங்குவதில்லை. குளிர்ச்சியான சந்திரனால் பொங்குகிறது. அதுபோல் இனிய சொற்கள் பேசுவதால் மக்கள் மகிழ்வர் கடுஞ் சொற்களால் மக்கள் மகிழ மாட்டார்.)

3) எரியின் - நெருப்பிலிட்ட; இழுது - நெய்; மண்டு - பொருந்திய; கலுழும் - அழும். (உடம்பில் பிற உறுப்புகளுக்கு ஏற்படும் துன்பத்தைக் கண்டு கண் அழும். அதுபோலப் பிறருடைய துன்பத்தைப் கண்டு பெரியவர்கள் வருந்துவர்.)

4) கைம்மாறு - பதில் உதவி; உகவாமல் - விரும்பாமல்; எயிறு - பற்கள்; முதிர்சுவை - மிகுந்தசுவை. (பல், உணவை நன்கு மென்று நாவிற்குச் சுவையூட்டும்; அதுபோல, கற்றவர்கள் பதிலுதவி கருதாது தம் உடம்பை வருத்திப் பிறர்க்கு உதவி செய்வர்.)

### ஆ) பிரித்தறிக:-

குணமென்க = குணம் + என்க ; இழுதாவர் = இழுது + ஆவர்
இருநீர் = இருமை + நீர் ; அழற்கதிர் = அழல் + கதிர்

### இ) சேர்த்து அறிக:-

வியன் + உலகம் = வியனுலகம் ; வன்மை + சொல் = வன்சொல்
கற்று + அறிந்தோர் = கற்றறிந்தோர் ; இயல் + உதவி = இயலுதவி

### ஈ) வினாக்களுக்கு விடையளிக்க :

1. உயர்ந்த குணமாக ஆசிரியர் எதனைக் குறிப்பிடுகிறார்?
2. உலகம் எதனால் மகிழ்கிறது?
3. 'கலுழுமே கண்' என்று முடியும் பாடல் உணர்த்தும் கருத்து யாது?
4. 'கற்றறிந்தோர் குணமாகச்' சிவப்பிரகாசர் கூறுவது யாது?

# 3. நீதிநெறி விளக்கம்



1. அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்; உறுங்கவலொன்று
உற்றுழியும் கைகொடுக்கும் ; கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை.

2. அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும், கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும் - நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும், நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலின் பூவாமை நன்று.

3. கல்வி உடைமை பொருளுடைமை என்றிரண்டு
செல்வமும் செல்வம் எனப்படும் ;- இல்லார்
குறை இரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
தலைவணங்கித் தாழப் பெறின்.

4. இனியவர் என்சொலினும் இன்சொல்லே; இன்னார்
கனியும் மொழியும் கடுவே; அனல் கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய் பொடிப்பச்
சிங்கி குளிர்ந்தும் கொலும்.

– குமரகுருபரர்

**ஆசிரியர் குறிப்பு :**

குமரகுருபரர் திருநெல்வேலி மாவட்டத்தில் திருவைகுண்டத்தைச் சார்ந்த கயிலாயபுரத்தில் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தவர்.

இவர் ஐந்து வயது வரை பேசும் ஆற்றலை இழந்து இருந்தார். பின்னர், திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் ஆற்றல் பெற்றார் என்றும், பாடல் புனையும் திறன் பெற்றார் என்றும் கூறுவர்.

இவர், கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மீனாட்சியம்மை குறம், மதுரைக் கலம்பகம், சகலகலாவல்லி மாலை முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார். பாடநூலில் வந்துள்ள பாடல்கள் இவரால் இயற்றப்பட்ட 'நீதிநெறி விளக்கம்' நூலிலிருந்து தரப்பட்டுள்ளன.

## மொழிப் பயிற்சி

### அ) சொல்லும் பொருளும் அறிக:-

1. பயக்கும் - கொடுக்கும்; புறங்கடை - வெளியே; நல்லிசை - நல்லபுகழ்; கவல் - கவலை; உற்றுழி - வந்தபோது. (கல்வியானது அறம், பொருள், இன்பம், வீடு, புகழ் ஆகியவற்றைக் கொடுக்கும்; துன்பத்தில் உதவும். இத்தகைய கல்வியைக் காட்டிலும் சிறந்த துணை வேறில்லை.)
2. மெய்விதிர்ப்பார் - உடல் நடுங்குபவர்; ஆகுலம் - ஆரவாரம்; நவை - குற்றம்; நல்கூர்ந்தார் - வறுமை உடையவர்; பூத்தல் - வெளிப்பட்டுத் தோன்றல். (அவையில் பேசுவதற்கு அஞ்சி உடல் நடுங்குபவர் கல்வியும் ; கல்லாதவரின், அவைக்கு அஞ்சாத ஆடம்பரப் பேச்சும்; பிறருக்குக் கொடுத்து உதவாதவரின் செல்வமும்; வறியவரின் அழகிய தோற்றமும் வெளிப்படாமல் இருத்தலே சிறப்பானதாகும்.)
3. உடைமை - செல்வம்; தாழ - பணிய. (கல்வியும் பொருளும் சிறந்த செல்வமாகக் கருதப்படும். பொருள் இல்லாதவர் பொருளைப் பிறரிடம் பணிந்து கேட்பது போலக் கல்விச் செல்வத்தையும் கற்றோரிடம் வணங்கிப் பணிந்து பெற வேண்டும்.)
4. கடு - நஞ்சு; அனல் - தீ; வெங்காரம் - உப்பு வகைகளுள் ஒன்று; சிங்கி - நஞ்சு. (மருந்துப்பு காரமாக இருப்பினும் நோய் தீர்க்கும். நஞ்சானது குளிர்ச்சியாக இருந்தாலும் உயிரைக் கொல்லும். அதுபோல நல்லவர் எச்சொல்லைக் கூறினாலும் அது நன்மை பயக்கும் ; தீயவர் இனிமையாகப் பேசினாலும் நஞ்சுபோல் தீங்கு பயக்கும்.)

### ஆ) பிரித்தறிக:-

புறங்கடை = புறம் + கடை ; நல்லிசை = நன்மை + இசை ; சிற்றுயிர் = சிறுமை + உயிர் ; வெங்காரம் = வெம்மை + காரம்

### இ) எதிர்ச்சொல் அறிக:-

கல்லார் X கற்றவர் ; குறை X நிறை ; இல்லார் X உடையார் ; இன்சொல் X வன்சொல்

### ஈ) வினாக்களுக்கு விடையளிக்க:-

1. கல்வி எவற்றையெல்லாம் கொடுக்கும் எனக் குமரகுருபரர் கூறுகிறார்?
2. பூத்தலின் பூவாமை நன்று - எவை?
3. கல்வியை எவ்வாறு கற்க வேண்டும்?
4. நல்லவர் தீயவர் பேச்சுக்கு உவமையாகக் கூறப்படுவன யாவை?

# 3. கதைப் பகுதி



## உடலுறுப்புகளின் சண்டை

(ஒருநாள் உடல் உறுப்புகளுக்குள் தங்களில் யார் பெரியவன் என்று சண்டை மூண்டது. அவை ஒவ்வொன்றும் தானே பெரியவன் என்று போராடின. இறுதியில் வயிறு அவற்றிற்கு அறிவுரை கூறி அமைதியை உண்டாக்கியது.)

**கால்** : ''உடலைத் தூக்கி நிற்கிறேன்!
ஓடி ஆடிச் செல்கிறேன்!
நடைஇல் லாமல் உழைப்பேது?
நானே பெரியவன்' - என்றது கால்!

**கை** : ''ஓடி ஆடிப் பயன் என்ன?
உழைப்பது நானே! என்றைக்கும்
பாடில் லாமல் வாழ்வேது?
பெரியவன் நானே!'' - என்றது கை!

**கண்** : ''உழைப்பது மட்டும் யாராலே?
ஒளியைப் பெறுவது யாராலே?
பிழைக்கும் உயிர்க்கே நானே தான்
பெரியவன் என்றே அறிவீரே!''

**வாய்** : உள்ளம் நினைப்பதைச் சொல்கின்றேன்
உலகில் பேசி வெல்கின்றேன்!
மெல்லல், குடித்தல் செய்கின்றேன்;
மேலோன் நானே யாவர்க்கும்!''

**மூளை** : ''நல்ல மூச்சும், சுவைப் பேச்சும்,
நன்மை தீமை நோக்குவதும்,
நல்ல பிழைப்பும், நல்லுழைப்பும்,
நானே அமைப்பேன் அறிவீரே!''
காலும், கையும், வாய் மூக்கும்
கண்ணும் மூளையும் இவ்வாறாய்
மேலும் மேலும் பேசிடவே
மிகுவாய் களைப்பை அடைந்தனவே.
கால் கை தளர்ந்தது! வறண்டது வாய்!

கண்இ ருண்டது, வாய் திணறியது!
மூளை கலங்கும் வகையாக
மூண்டது தீப்பசி வயிற்றுக்குள்ளே!

வயிறு : பசியால் வயிறு பேசியது!
'பசி' எனக் கேட்டால் அன்போடு
'புசி' என் பானே பெரியவனாம்!
'போ' என் பானே சிறியவனாம்!

- பெருஞ்சித்திரனார்

### ஆசிரியர் குறிப்பு :

பெருஞ்சித்திரனார் 10-03-1933 இல் சேலத்தில் பிறந்தார். இவருடைய தந்தையார் திரு. இரா.துரைசாமி ; தாயார் குஞ்சம்மாள் ; இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் மாணிக்கம் என்பதாகும். பெருஞ்சித்திரன் என்பது புனைபெயராகும்.

இவர் கனிச்சாறு, கொய்யாக்கனி, ஐயை, பாவியக் கொத்து, பள்ளிப்பறவைகள் முதலான நூல்களை இயற்றியுள்ளார். இந்தக் கதைபொதி பாடல் 'பள்ளிப்பறவைகள்' என்னும் நூலில் இடம் பெற்றுள்ளது. இவர் 11-06-95 இல் மறைந்தார்.

## மொழிப் பயிற்சி

### அ) சொல்லும் பொருளும் அறிக:-

பாடில்லாமல் - உழைப்பில்லாமல் ; மேலோன் - உயர்ந்தோன் ; மிகுவாய் - மிகுதியான ; தீப்பசி - கொடும்பசி.

### ஆ) எதிர்ச்சொல் அறிக:-

பெரியவன் x சிறியவன் ; மேலோன் x கீழோன் ; நினைப்பது x மறப்பது ; நன்மை x தீமை

### இ) கீழ்க்காணும் வினாக்களுக்கு விடையளிக்க :-

1. தான் பெரியவன் என்பதற்குக் கால் கூறிய காரணங்களைக் கூறுக.
2. தான் என்ன பணி செய்வதாகக் கை கூறியது?
3. தான் பெரியவன் என்பதைக் கண் எவ்வாறு விளக்கியது?
4. தான் மேலோன் என்பதை வாய் எவ்வாறு வெளிப்படுத்தியது?
5. தன் சிறப்பாக மூளை கூறியது யாது?
6. வயிறு கூறிய தீர்ப்பு யாது?

# அகராதி



| | | |
|---|---|---|
| **அ**கண்டம் | - | அகலம் |
| அண்டை | - | அருகில் |
| அணி/அணிகலன் | - | நகை |
| அம்புலி | - | நிலா |
| அர்ப்பணித்தல் | - | மனம் உவந்து கொடுத்தல் |
| அரங்கு | - | கூடம் |
| அரியணை | - | அரசன் இருக்கை |
| அருகில் | - | பக்கத்தில் |
| அலங்கரித்தல் | - | அழகுபடுத்துதல் |
| அவலம் | - | துன்பம் |
| அவிழ்தல் | - | மலர்தல் |
| அளப்பரிய | - | அளவிட முடியாத |
| அறிஞர் | - | சான்றோர்; மேதை |
| அறிவுரை | - | நல்வழி |
| **ஆ**க்கம் | - | செல்வம் / வளர்ச்சி |
| ஆணை | - | கட்டளை |
| ஆபரணம் | - | அணிகலன் |
| ஆம்பல் | - | அல்லிமலர் |
| ஆலை | - | தொழிற்கூடம் |
| **இ**ரக்கம் | - | கருணை |
| இல்லம் | - | வீடு |
| இறக்குமதி | - | பண்டங்களை வெளிநாட்டிலிருந்து தருவித்தல் |
| **உ**ண்டி | - | உணவு |
| உரோமம் | - | மயிர் |
| உவகை | - | மகிழ்ச்சி |
| **ஊ**று | - | துன்பம் |
| ஊன் | - | உடம்பு ; தசை |
| **ஏ**ற்றுமதி | - | பண்டங்களை அயல் நாட்டுக்கு அனுப்புதல் |
| **ஒ**ப்படை | - | சேர் |
| ஒப்பனை | - | அழகு செய்தல் |
| ஒளிர்ந்தன | - | மின்னின |
| **ஓ**டை | - | சிறு அருவி |
| **க**ண்டம் | - | பரந்த நிலப்பரப்பு |

| | | |
|---|---|---|
| கதிர் | - | சூரியன் |
| கம்பலை | - | ஆரவாரம் / ஒலி |
| கருணை | - | இரக்கம் |
| கவலை | - | நீர் இறைக்கப் பயன்படும் கருவி ; வருத்தம் |
| கழனி | - | வயல் |
| களிப்பு | - | மகிழ்ச்சி |
| களிறு | - | ஆண்யானை |
| காரிருள் | - | மிகக்கரிய இருள் |
| கால்நடை | - | விலங்கு |
| குவலயம் | - | உலகம் |
| குழுமினர் | - | கூடினர் |
| கூவு | - | உரக்கப் பேசு / அழை |
| கேளிக்கை | - | பொழுதுபோக்கு |
| கேளிர் | - | உறவினர் |
| கைம்மாறு | - | பதில் உதவி |
| கொடூரம் | - | கொடுமை |
| கொழித்த | - | பெருகிய/விளைந்த |
| சகிக்க முடியாத | - | பொறுக்க முடியாத |
| சங்கமம் | - | இரண்டறக் கலத்தல் |
| சமத்துவம் | - | சமம் |
| சமுத்திரம் | - | பெருங்கடல் |
| சித்திரம் | - | ஓவியம் |
| சிந்தை | - | எண்ணம் |
| சிவந்து | - | சிவப்பாக |
| சினம் | - | கோபம் |
| சுவடு | - | கால்தடம் |
| சூறாவளி | | சுழன்று அடிக்கும் காற்று |
| செந்நீர் | - | இரத்தம் |
| செருக்கு | - | ஆணவம்; கர்வம் |
| செழிப்பான | - | வளமான |
| சேவை | - | தொண்டு |
| சைகை | - | குறிப்பு |
| தட்பவெப்பம் | - | குளிர்ச்சியும் வெப்பமும் |
| தத்துவம் | - | கொள்கை |
| தார் | - | மாலை |

| | | |
|---|---|---|
| தானம் | - | கொடை |
| திரு | - | திருமகள் ; செல்வம் ; மேன்மை |
| திரை | - | அலை |
| தீரச்செயல் | - | வீரச்செயல் |
| துயர் | - | துன்பம் |
| தூதுவன் | - | செய்தி கொண்டு செல்பவன் |
| நத்தி | - | நாடி |
| நவீன | - | புதிய |
| நயமாக | - | இனிமையாக |
| நல்குரவு | - | வறுமை |
| நாட்டம் | - | விருப்பம் |
| நானிலம் | - | உலகம் |
| நுட்பம் | - | நுணுக்கம் |
| நேயம் | - | அன்பு |
| நேர்மை | - | உண்மை |
| பஞ்சம் | - | வறுமை |
| பட்டாளம் | - | படைவீரர் தொகுதி |
| பட்டினம் | - | கடற்கரை நகரம் |
| பண்டமாற்று | - | ஒரு பொருளைக் கொடுத்து வேறு பொருளை வாங்குதல் |
| பண்பு | - | குணம் |
| பதற்றம் | - | அமைதியற்ற நிலை |
| பத்திரமாக | - | பாதுகாப்பாக |
| பவனி | - | உலா |
| பழுது | - | கோளாறு |
| பாதங்கள் | - | காலடிகள் |
| பார் | - | உலகம் |
| பிணி | - | நோய் |
| புகழ் | - | பெருமை |
| புகாத | - | நுழையாத |
| புசிக்கலாமா | - | உண்ணலாமா |
| புலன் | - | உறுப்பு |
| புலர்ந்தது | - | விடிந்தது |
| புவி | - | பூமி / உலகம் |
| புனைந்து | - | அழகு செய்து |
| பூரிப்பு | - | மகிழ்ச்சி |

| | | |
|---|---|---|
| **பே**தம் | - | வேறுபாடு |
| பேணி | - | பாதுகாத்து |
| **பொ**தி | - | மூட்டை |
| பொழில் | - | சோலை |
| பொறி | - | இயந்திரம் ; உறுப்பு |
| பொன்விழா | - | ஐம்பதாண்டு நிறைவு விழா |
| **ம**ருண்டு | - | பயந்து |
| **மு**கப்பு | - | முன்புறம் |
| முதியவர் | - | பெரியவர் |
| முப்போகம் | - | ஓர் ஆண்டில் மூன்று விளைச்சல் |
| முற்றுகையிடல் | - | சுற்றி வளைத்தல் |
| முடக்கி | - | தடுத்து |
| **மே**தை | - | பேரறிஞர் / சான்றோர் |
| மேவு | - | சிறந்த |
| **வ**ண்ணக் குழம்பு | - | நிறங்களின் கலவை |
| வந்தே மாதரம் | - | தாய் நாட்டை வணங்குவோம். |
| வலம் | - | சுற்றுதல் |
| வனம் | - | காடு |
| **வா**யில் | - | வாசல் |
| வாணிகம் | - | வியாபாரம் |
| **வி**யக்கும்படி | - | ஆச்சரியப்படும்படி |
| விண்ணப்பம் | - | வேண்டுதல் |
| விந்தை | - | வியப்பு |
| விருது | - | பட்டம் |
| விழிப்புணர்வு | - | எழுச்சி |
| விழைகிறேன் | - | விரும்புகிறேன் |
| விழைந்தனர் | - | விரும்பினர் |
| **வீ**ரிய | - | சக்திவாய்ந்த |
| **வெ**தும்பினர் | - | வருந்தினர் |
| வெம்மை | - | வெப்பம் |
| **வே**தனை | - | துன்பம் |
| வேலை | - | கடல் ; பணி |
| வேளாண்மை | - | உழவுத் தொழில் |
| வேனிற்காலம் | - | கோடைக்காலம் |

# திறன் பகுதி / திறன் (பாட எண்)

1. **கேட்டல்**
   1. ஒப்புவித்தல், நாடகம், சொற்போர் இவற்றை கேட்டுப்புரிந்து கொள்ளுதல் (1,8,9)
   2. முன்னறிமுகம் இல்லாத சூழலில் உரையாடல், வசனங்கள் கலந்துரையாடல்கள் முதலியவற்றைப் புரிந்து கொள்ளுதல் (2,3)
   3. குழுச் செயல்பாடுகள் ஒன்றிற்கான அறிவுரையை ஏற்றுச் செயல்படுதல் (4)
2. **பேசுதல்**
   4. இயல்பாகவும் சரளமாகவும் பேசுதல் (5)
   5. தெரிந்த எளிய தலைப்புகளில் பேசுதல் (5)
   6. சூழ்நிலைகளையும் நிகழ்ச்சிகளையும் விவரிக்கும் திறன் (6,7)
   7. நாடகங்களில் சொற்போர்களில் பங்கேற்றல் மற்றும் நிகழ்ச்சி அறிவிப்புகளைக் கூறும் திறன் (8,9)
3. **படித்தல்**
   8. எளிய எண் விபர விளக்க அறிவிப்பு, வரைபடங்கள் முதலியவற்றைப் படித்து அறிதல் (10)
   9. அச்சு எழுத்துக்களையும் கையெழுத்துப் பிரதிகளையும் சுலபமாக வாசித்தறிதல் (11)
   10. செய்தித்தாள்களையும் மற்ற அச்சிட்ட செய்திகளையும் வாசித்தல் (12)
4. **எழுதுதல்**
   11. சரியான வடிவமைப்புடன் இடைவெளிவிட்டு எழுதுதல் (13)
   12. எல்லா ஒலி நிறுத்தக் குறியீடுகளையும் சொல்லக் கேட்டு எழுதுதல் (13)
   13. எளிமையான கட்டுரைகளையும் கடிதங்களையும் உரையாடல்களையும் எழுதுதல் (11,14)
5. **கேட்டல் மற்றும் படித்தல் வாயிலாகக் கருத்துகளைப் புரிந்து கொள்ளுதல்**
   14. வாய்மொழி எழுத்துரைத் தகவலில் அனுமானங்களை யூகித்தறியும் திறன் (15)
   15. வாய்மொழியைக் கேட்டும் உரைநடையைப் படித்தும் அப்படியானால் 'பிறகு' அப்படி இல்லாவிட்டால் 'பிறகு' என்ற வினாக்களைப் புரிந்து விடை கூறல் (16)
6. **செயல்முறை இலக்கணம்**
   16. சொல் இலக்கணத்தின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல் (அனைத்துப் பாடங்களிலும்)
7. **தானே கற்றல்**
   17. குழந்தைகள் கலைக் களஞ்சியத்தைப் பயன்படுத்தும் திறன் (17)
8. **மொழியைப் பயன்படுத்துதல் - ஆளுதல்**
   18. சூழலுக்குத் தக்கவாறு முறை சார்ந்த பேச்சு (அ) பேச்சு வழக்கு மொழியைப் பயன்படுத்துதல் (18)
9. **சொல்லாட்சித் திறன்**
   19. 5000 சொற்களைப் பயன்படுத்தும் திறன் (அனைத்துப் பாடங்களும்)